

# ஒரு ரூபாய் மிச்சப்படுத்துங்கள்!




**சிந்தால்**
**சோப் வாங்கும்போது**
**சிந்தால் பவுடர் விலையில் ஒரு**
**ரூபாய் மிச்சப்படுத்துங்கள் ***

கூப்பன் அறிவிப்புடன் கூடிய சிந்தால் சோப் வாங்குங்கள். உறையின் பின் பக்கத்தில் ஒரு கூப்பன் இருக்கும். அதை உங்கள் டீலரிடம் கொடுத்து, ஒரு ரூபாய் தள்ளுபடியில் சிந்தால் டாய்லெட் பவுடர் (எந்த சைஸானாலும்) வாங்கிக் கொள்ளுங்கள்.




**இந்த வாய்ப்பை நழுவ விடாதீர்கள்!**
**இன்றே முந்துங்கள்!**

*ஸ்டாக்குகள் உள்ளவரையே இந்தச் சலுகை உண்டு

Interpub/GS/13/75 TM







# கல்கி


[illegible]
வைகாசி 24
ஜூன் 6, 1976


⁜

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

**பூர்வாசிரமத்தில்....**

காஞ்சி காமகோடி பீடாதிபதியாக விளங்கும் ஸ்ரீ ஜெயேந்திர ஸ்வாமிகள், ஓவியம் வரையத் தெரிந்தவர்!

பூர்வாசிரமத்தில், மாணவப் பருவத்தில் 'ஆதி சங்கரர்' ஓவியம் தீட்டி, சென்னை 'கண்ணன்' பத்திரிகைக்கு அனுப்பி, பரிசு பெற்றிருக்கிறார்!

தகவல்: ஏ. சுவாமிநாதன்


அடுத்த இதழில்: ஆறு மொழிகள் அறிந்தவர்




அன்புள்ள கல்கி வாசகர்களே!

வணக்கம்.

'நெஞ்சை விட்டு நீங்காத காட்சி' என்ற பகுதியில் ''உண்மையே உன் விலை என்ன?'' படத்தில் வரும் காட்சிகளைப் பற்றிய கடிதங்களில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்துக் கல்கி பத்திரிகையிலிருந்து எனக்கு அனுப்பி வைத்தனர்.

டைட்டில்களோடு இணைந்து வரும் காட்சிகளிலிருந்து, கடைசியில் பாதிரியார் உயிர் துறக்கும் காட்சிவரை, பல காட்சிகளைப் பற்றி 'கல்கி' வாசகர்கள் எழுதியிருக்கிறீர்கள்.

இதைப் பற்றி இரண்டு வகைகளில் நான் நினைத்துக் கொள்ளலாம். முதல் வகை— 'ஆரம்பத்திலிருந்து, இறுதிவரை, நெஞ்சை விட்டு நீங்காத காட்சிகள் இடம் பெற்றிருக்கின்றன' என்று நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொள்ளலாம். அல்லது, 'பதின்மூன்றாயிரம் அடிகள் படத்தில் ஒரே ஒரு காட்சிதான், ஒவ்வொருவருக்குப் பிடித்திருக்கிறது' என்ற உண்மையையும் உணர்ந்து கொள்ளலாம்— இது இரண்டாவது வகை. நான் முதல் வகையான நினைப்பிலேயே இருந்துவிடுகிறேன்!

அதிகம் வாசகர்கள் குறிப்பிட்டு எழுதியுள்ள காட்சியைப் பற்றி நான் எழுதுவதற்கு முன்னால், ஓர் உண்மையைக் குறிப்பிட்டுக் காட்டி, 'கல்கி' பத்திரிகையின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். இந்தப் பகுதியில் என் பதிலைப் பிரசுரிப்பதன் மூலம், 'கல்கி' தன்னையுமறியாமல் என்னை ஒரு டைரக்டர் என்று ஏற்றுக்கொண்டு விட்டது! இதிலிருந்து அவர்கள் தப்பிக்க முடியாது. காலம் அவர்களை மன்னிக்கட்டும்!

அதிக வாசகர்கள் விரும்பியிருக்கும் காட்சி, இறுதியில் பாதிரியார் உயிர் துறக்கும் காட்சியே.

''உண்மைக்காகப் போராடிய பாதிரியார் உயிர் துறக்கத்தான் வேண்டுமா, அவரை வாழ விட்டிருக்கக் கூடாதா?'' என்று சிலர் கேட்டிருக்கிறீர்கள். உண்மைக்காகப் போராடுபவர் உயிரை இழக்க நேர்ந்தால் அதற்காக, அவர், உயிரை இழக்கப் போகும் தருணத்தில்கூட வருந்துவதில்லை. அப்படி உயிர் இழக்க நேரிட்டவரை நினைத்து நாம் பரிதாபப்படக் கூடாது, பெருமைப்பட வேண்டும் என்று நினைக்கிறேன். அப்படிப்பட்ட மனிதனை மரியாதைக்குரியவனாக நினைக்க வேண்டுமே தவிர, பச்சாத்தாபத்துக்குரியவனாக நினைக்கலாமா?

அதுவுமில்லாமல் உண்மைக்காகப் போராடியவர்கள் வாழ்ந்து கொண்டேயிருந்தால், அவர்களுக்கு நம் நாட்டில் என்ன மரியாதை கொடுத்து விடுகிறோம்? செத்தால்தானே புகழாரம் சூட்டுகிறோம்? இந்தக் கதையின் நாயகனான பாதிரியாரை நான் சாகடித்தது, நம்மிடையே அவர் மரியாதை பெறுவதற்காக, புகழ் பெறுவதற்காக என்று வைத்துக் கொள்ளுங்களேன்!

அந்தக் காட்சியை எடுத்த விதத்தில் பெரிய உத்திகள் எதுவும் இல்லை. (சொல்லப்போனால் படம் முழுவதிலுமே என்ன பெரிய டெக்னிகல் உத்திகள்? அவை இப்படத்துக்குத் தேவையல்ல, உகந்ததுமல்ல என்றே நினைக்கிறேன்) ஆனால் ஒரு சங்கடம் இருந்தது.

பெங்களூர் அரண்மனையில் ஒரு பகுதியில் ஒரு முற்றத்தைச் சுற்றி நான்கு தாழ்வாரங்கள் இருந்தன. ஒரு தாழ்வாரத்தில் இக் காட்சியைப் படமாக்கினோம். இரவு நேரம். திடீரென்று ஒரே மழை. அதனால் முற்றத்திலோ தாழ்வாரத்தின் ஓரங்களிலோ விளக்குகளை வைக்க முடியவில்லை. ஏதோ ஒரு விதமாகக் காமிராமேன் சம்பத் சமாளித்தார். (அவருடைய சமாளிப்பு ஒரே ஒரு காட்சியில் தான் தெரியும். என் 'சமாளிப்புகள்' படம் முழுவதும் தெரியுமோ என்னவோ!)

இந்தக் காட்சியை எடுத்து முடிக்கப் போகும் சமயத்தில் சென்னையிலிருந்து ஒரு செய்தி வந்தது. 'காமராஜ் இறந்தார்!'

இடி விழுந்தது போலிருந்தது. யாரும், யாருடனும் பேச முடியாத நிலை.

படமாக்கப்படும் காட்சி — உண்மைக்காகப் போராடிய மனிதன் உயிர் துறக்கும் காட்சி. வந்த செய்தி — உண்மைக்காகப் போராடிய ஓர் அரசியல் தலைவன் உயிர் துறந்த செய்தி.

அக்காட்சியைப் பொறுத்தவரையில், என் நெஞ்சை விட்டு நீங்காத விஷயம் இதுவாகத் தான் இருக்கும்.

கல்கிக்கும், கல்கி வாசகர்களுக்கும் எனது நன்றிகள்.

அன்புடன் 'சோ'

# நவீன விசுவாமித்திரர்!









# அமைதியா, அராஜகமா?

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்.** — திருவள்ளுவர்

கல்கி

மலர் 35

இதழ் 45



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

பிரதமர் இந்திரா காந்தி குறளாசிரியரைப் போலவே, நாட்டு நடவடிக்கைகளில் ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் பெரிதும் விரும்புகிறார். அதனால்தான் பல கட்சிகள் ஒன்றாக இணைந்த சக்தி வாய்ந்த எதிர்க்கட்சி அமைக்கப்படும் என்ற செய்தியைக் கேட்டவுடன், ''எதிர்க்கட்சி அமைப்பது சரிதான்; ஆனால் அவர்கள் ஒழுங்காக நடந்து கொள்வார்களா? அல்லது பழையபடியே கட்டுப்பாடின்றி, கலவரத்தையும் கிளர்ச்சியையும் வளர்க்கும் முறையில் நடந்துகொள்வார்களா?'' என்று கேட்டிருக்கிறார்.

சமீப கால அனுபவத்தின் ஆதாரத்தைக் கொண்டு அவர் எழுப்பிய கேள்வியில் நியாயமும் பொருளும் இருக்கிறது.

பீகார் சட்டசபை அங்கத்தினர்களைச் சட்டசபைக்குள் நுழைய விடாமல், நடத்தப்பட்ட போராட்டத்தின் தன்மையை மக்கள் அவ்வளவு சீக்கிரத்தில் மறந்திருக்க மாட்டார்கள்.

போலீஸையும், ராணுவத்தையும் ஆட்சியாளர்களின் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய வேண்டியதில்லை என்ற தூண்டுதலையும் மக்கள் மறந்திருக்க முடியாது. இவை எல்லாம்தானே, 'அவசர நெருக்கடி நிலைமை' பிரகடனத்துக்குக் காரணமாயிருந்தன!

இந்த நெருக்கடி பிரகடனம் செய்யப்பட்ட பிறகுதான் பல அவசர நடவடிக்கைகளை எடுத்து நாட்டில் ஓரளவு சுபிட்சத்தையும், அமைதியையும் நிலைநாட்டியிருக்கிறார் நமது பிரதமர். ஏழை மக்களின் அன்றாட உணவுக்கு வேண்டிய அத்தியாவசியப் பண்டங்களின் விலைகளும் குறைய ஆரம்பித்திருக்கின்றன. மக்களும் நிம்மதிப் பெருமூச்சு விட்டு வருகின்றனர்.

இத்தகைய சூழ்நிலையில் ஒருங்கிணைந்த எதிர்க்கட்சி அமைக்கப் போவதாகச் செய்தி வந்தவுடன், பிரதமர் கூறிய வார்த்தைகள் பாரத நாட்டுப் பல கோடி மக்களின் உள்ளக் குரலாக, அபிப்பிராயத்தின் பிரதிபலிப்பாகவே இருந்தது.

ஜனநாயகத்தில் பிரதமருக்கு நம்பிக்கை உண்டு. எதிர்க்கட்சி அவசியம் என்பதையும் பிரதமர் மறுக்கவில்லை. ஆட்சியாளர்களின் அதிக்கிரமச் செயல்களைச் சுட்டிக்காட்டித் திருத்த எதிர்க்கட்சி தேவைதான் என்பதையும் அவர் மறுக்கவில்லை. ஆனால் எதிர்க்கட்சி ஆக்கபூர்வமான ஆலோசனைகளை வழங்கியும், நாட்டின் ஒற்றுமையைப் பலப்படுத்தியும், மக்களின் நல்வாழ்வைப் பெருக்கியும், பொறுப்புணர்ச்சியுடன், நடந்து கொண்டு ஜனநாயகத்தை உறுதிப்படுத்த வேண்டும் என்றுதான் அவர் விரும்புகிறார். இந்தப் பொறுப்புணர்ச்சியுடன் உருவாகப் போகும் எதிர்க்கட்சி நடந்து கொள்ளுமா? -- இதுதான் அவருடைய சந்தேகம். ஏன், மக்களின் சந்தேகமும் அதுவே.

எந்தக் காரியத்தையும் பத்து ஆண்டுகள் முன்னதாகவே செய்யும் வழக்கம் கொண்டிருந்த ராஜாஜி, ஆளும் ஆட்சிக்கு நல்ல எதிர்க்கட்சி வேண்டும் என்று சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்தார். அப்போது அவர் கூறிய மொழிகள் இன்றைக்கும் பொருத்தமாக இருப்பதால் மீண்டும் நினைவுபடுத்த விரும்புகிறோம்.

சுதந்திர பாரதத்தில் இனி போராட்ட அரசியலுக்கு இடமில்லை. காந்தி மகானுடனும், அந்நிய ஆட்சியுடனும் அவ்வகை அரசியல் முடிந்துவிட்டது. சுதந்திர பாரதத்தில்—பார்லிமெண்டரி—ஜனநாயக ஆட்சி முறை வகுத்துக் கொண்டுவிட்ட நாட்டில் எதையும் சர்ச்சை செய்து, வாத விவாதம் புரிந்து கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டு முடிவு எடுத்து ஆளவேண்டும். அதற்குச் சட்டசபைகளில் ஆளும் கட்சிக்கு ஏறத்தாழச் சமமான பலம் கொண்ட

எதிர்க்கட்சி வேண்டும். அதற்குத்தான் சுதந்திரக்கட்சி ஆரம்பிக்கப்படுவதாக அறிவித்தார்.

இப்போது மார் தட்டி முன்னே வந்து நிற்கும் தேசத் தலைவர்கள் அப்போது சும்மா இருந்து விட்டார்கள். தும்பை விட்டு வாலைப் பிடித்துக்கொள்வதுபோல, இப்போது நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது. காலம் தாழ்ந்தாலும் நல்ல பணி எப்பவும் செய்ய வேண்டியது தான் தேசத் தலைவர்களின் கடமை. பொறுப் புணர்ச்சியை வளர்க்கும் முறையில் செயல் பட்டால் உண்மையில் நன்மை உண்டாகும்.

ஆளும் கட்சியில் உள்ளவர்களுக்கு எவ்வளவோ ஆதாயங்களும் சலுகைகளும் உண்டு. அவை, எதிர்க்கட்சி நலிவதற்குப் பயன்படாமலிருக்கப் பிரதமர் பார்த்துக் கொண்டால் நாட்டில் ஆரோக்கியமான ஜனநாயகம் தழைக்க முடியும்.

# என்ன சேதி?

## துயர் துடைக்க

விருந்தினர் கட்டுப்பாடு சட்டம் மத்திய தர வகுப்பினருக்கு வரப்பிரசாதம் என்று கருதுகின்றனர் சிலர். ஆனால் உண்மையில் நிகழ்வது என்ன? ''உங்களுக்குத்தான் சாப்பாட்டுச் செலவு குறைந்துவிட்டதே, அதற்குப் பதில்...'' என்று ஆரம்பித்துப் புதிய கோரிக்கைகளை விடுக்கின்றனர், பிள்ளை வீட்டார் பலர். அதே போல, ''வரதட்சிணை பைசாக்கூடத் தர வேண்டாம்; அதற்குப் பதில்....'' என்று நிபந்தனைகளைப் பெருக்குகின்றனர். இந்த நிலையில் மெய்யான மன மாற்றமே பலன் தரவல்லது என்று புரிந்து கொண்டு மதுரையில் பிராமண இளைஞர் சங்கம் பாடுபடுகிறது. ''தாய்மார்களே! வரதட்சிணை வாங்காதீர்கள்; வைதிக முறைகளுக்கு முக்கியத்துவம் கொடுங்கள், லௌகிக முறைகளில் ஆடம்பரச் செலவு வேண்டாம்'' என்று கேட்டுக் கொள்கிறது.

அதோடு வசதியற்றவர்களின் துயர் துடைக்கக் காஞ்சிப் பெரியவாளின் ஆசிகளுடன் அவ்வப்போது சமஷ்டி கல்யாணங்களை நடத்தி வருகிறது.

இந்த நற்பணிகளுக்கு உதவ விரும்புவோருக்கு விலாசம்: பிராமண இளைஞர் சங்கம், 21, சம்பந்தமூர்த்தி தெரு, மதுரை—1.

## வேதம் தழைக்கட்டும்

வேதாந்ததேசிகரின் கைங்கரியத்திலேயே வாழ்நாளை அர்ப்பணித்துள்ள கோயில் கந்தாடை ஸ்ரீ ராமதாசரதி மூலம் இயங்கி வரும் சிரவண நட்சத்திர டிரஸ்ட் வழக்கம்போல் இந்த வருடம் பதினாறு பிரம்மசாரிகளுக்குத் தலா ஆயிரம் ரூபாய் சம்பாவனையும், வஸ்திரங்களையும் தூப்புல் விளக்கொளி பெருமாள் சந்நிதியில் 19—5—76 அன்று சம்பாவனை செய்தார்கள். காஞ்சி வரதராஜ ஸ்வாமியின் தீர்த்தவாரி முடிந்தபிறகு வேதாந்த தேசிகர் சந்நிதிக்கு எழுந்தருளும் காலத்தில் நடந்தது. அக்னிஹோத்ரம் இராமாநுஜ தாதாசாரியார் தலைமை தாங்கி ஸ்ரீ தாசரதியின் முயற்சியைப் புகழ்ந்து வேத வித்யை அபிவிருத்தி செய்ய வேண்டியது பற்றிப் பேசினார்.

''வேதம் தழைக்கட்டும்; வளங்கள் பெருகட்டும்'' என்று வேண்டி இந்த நற்பணியை நாமும் வாழ்த்துவோம்.

## இளைஞர்களுக்கு ஒரு நற்செய்தி

சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்த மத்திய மந்திரி திரு ராமநிவாஸ் மிருதா, ''நமது தேசிய விளையாட்டுகளில் தற்சமயம் பள்ளிக் கூடங்களிலும் கல்லூரிகளிலும் படிக்கும் இளைஞர்கள் மட்டும் பங்கு எடுத்துக் கொள்கின்றனர். ஆனால் நாட்டில் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளுக்கு வெளியே லட்சக்கணக்கான இளைஞர்கள் இருக்கின்றனர். இவர்களையும் நமது தேசிய விளையாட்டுக்களில் ஆர்வம் கொள்ளச் செய்து பயிற்சியளித்தாலன்றி; நமது தேசிய விளையாட்டுத் தரம் உயராது; உலக நாடுகளிடை போட்டியிடும் திராணி வராது'' என்றார்.

ஆகவே நமது நாட்டுப்புறங்களிலுள்ள இளைஞர்களைத் தேசிய விளையாட்டுக்களில் ஆர்வம் காட்டச் செய்ய ஊக்கமளிக்க மத்திய அரசு முயன்று வருகிறது என்றும், அவ் வகையில் பாட்டியாலாவிலிருப்பது போன்ற தேசிய விளையாட்டுப் பயிற்சிக் கழகம் தென் பிராந்தியங்களுக்கென்று பெங்களூரில் விரிவுபடுத்தப்பட இருக்கிறது என்றும் கூறினார். தென்னாட்டு இளைஞர்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் செய்தி இது.

ராஜாஜி சிந்தனை

### ஊர் நன்றாக இருந்தால்....

உண்மை பேசுவதும், பேசியபடி செய்வதும் வீரனுக்கு அடையாளம். எந்த மனிதனும் தனியாகச் சுகமடைய முடியாது. சமூகம் செழித்தால் தான் தன் குடும்பம் செழிக்கும். ஆதலால் பிறர் சுகத்தையும் கவனித்து வாழ வேண்டும்.

ஊர் நன்றாக இருந்தால் எல்லாருக்கும் நல்லது. ஒவ்வொருவரும் குடும்பத்துக்கு உழைப்பதுபோல் ஊருக்கும் உழைக்க வேண்டும்.

# ஜீவகாருண்யம் 6

ரந்தி தேவன் என்பவன் சந்திர வம்சத்தில் வந்த ராஜா. இவன் ஏகப்பட்ட யாக யக்ஞாதிகளைச் செய்த விஷயம் மகாபாரதத்தில் வருகிறது: இப்படிக் கர்மாநுஷ்டானத்திலேயே ஈடுபட்டிருந்ததால் இவனுக்கு ஜீவகாருண்யம் வற்றிவிடவில்லை என்கிற கதையை ஸ்ரீமத் பாகவதம் சொல்கிறது.

பழைய சாஸ்திரங்களிலேயே 'இஷ்டம்', 'பூர்த்தம்' என்று ஜனங்கள் அநுஷ்டிக்கவேண்டிய இரண்டு விஷயங்களைச் சொல்லியிருக்கிறது. இவற்றில் 'இஷ்டம்' அல்லது 'இஷ்டி' என்பது யாக யக்ஞாதிகள். தசரதன் புத்ர காமேஷ்டி பண்ணினான் என்கிறோமே, அது புத்ர காம இஷ்டிதான் — அதாவது பிள்ளையை விரும்பிச் செய்த இஷ்டி (யாகம்).

'பூர்த்தம்' என்பது என்னவென்றால், அதுதான் தற்காலத்தில் ரொம்பப் பேர் நம் மதத்தில் இல்லாதது என்று நினைக்கிற ஸோஷல் ஸர்வீஸ். கிணறு, குளம் வெட்டுவது, ரோடு போடுவது, கோயில் கட்டுவது முதலிய சமூகப் பணிகளுக்குப் 'பூர்த்தம்' 'பூர்த்தம்' என்று பேர். 'இஷ்டம்' செய்யச் சில பேருக்குத்தான் அதிகாரமுண்டு. அது ரொம்பக் கஷ்டம் கூட. நியமங்கள் ஜாஸ்தி. பூர்த்தம் அப்படியில்லை. பாமர ஜனங்களிலிருந்து ச்ரேஷ்டிகள் வரையில் ஏழை—பணக்காரன், அந்த ஜாதிக்காரன் — இந்த ஜாதிக்காரன் என்கிற பேதம் கொஞ்சம்கூட இல்லாமல் சகல ஜனங்களும் ஒன்றுசேர்ந்து பண்ண வேண்டியதே பூர்த்தம். பூர்த்தத்தைப் பற்றிப் பின்னால் இன்னும் சொல்கிறேன். இப்போது ரந்தி தேவன் கதையைப் பார்க்கலாம்.

இந்த ரந்தி தேவன் யக்ஞங்கள் செய்து ஏகமாக தானம் பண்ணினான். அவனுடைய கஜானா முழுக்கக் காலியாகி விட்டது. ஒரு செல்லாக் காசு பாக்கியில்லை. அப்படி வாரி வாரி "தேஹி" என்று வந்தவர்களுக்கெல்லாம் "நாஸ்தி" என்று சொல்லாமல் தானம் பண்ணி விட்டான்.

இப்போது பகவான் ஸ்ரீ மஹாவிஷ்ணு ஒரு சோதனை பண்ணினார். ராஜ்யத்திலே பெரிய பஞ்சம் வரும்படியாகப் பண்ணி விட்டார். நியாயமாகப் பார்த்தால் யக்ஞம் செய்வதே மழை, தானிய ஸம்ருத்திக்காகத்தான். இப்போது நேர்மாறாக ஒரே பஞ்சமாகி விட்டது.

அப்போதும் ரந்தி தேவன் தன்னுடைய உடைமைகளை யெல்லாம் ஒன்றொன்றாகத் தானம் பண்ணிக் கொண்டே வந்தான். கடைசியில் ராஜாவான அவனுக்கும், அவனுடைய ராஜ குடும்பத்துக்குமே ஒரு வேளை கூழுக்குக்கூடக் கதியில்லை என்கிற நிலைமை வந்து விட்டது. ஆனால் கொடுத்தே பழகிய அவன் யாசகம் பண்ணவில்லை. நாற்பத்தெட்டு நாள் — ஒரு மண்டலம் — குடும்பத்தோடு சுத்த உபவாசம் இருந்துவிட்டான். அப்புறம் எப்படியோ வெளியிலே ராஜ குடும்பம் பட்டினி கிடக்கிறது என்று தெரிந்துவிட்டது. ஆளப்பட்ட ராஜா — வள்ளலாகப் பிரஜைகளை ரட்சித்தவன் — குடும்பத்தோடு வயிறு காயக் கிடக்கிறான் என்றவுடன் யாரோ எப்படியோ கொஞ்சம் கோதுமைக் கஞ்சியும் தண்ணீரும் சேகரம் பண்ணி நாற்பத்தொன்பதாவது நாளன்று அவனுக்கும் அவனுடைய பத்தினி புத்திரர்களுக்குமாக அனுப்பி வைத்தார்கள்.

முதுகோடு வயிறு ஒட்டிக் கொள்கிற மாதிரிக் காய்ந்து கிடந்த ஸ்திதியில் இது தேவாமிருதமாக வந்தது. ஆசையோடு அந்தக் கஞ்சியை ராஜ குடும்பத்தினர் வாயில் விட்டுக் கொள்ளப் போகிற சமயம். அப்போது பார்த்து ஒரு பிராம்மணன் அங்கே வந்து சேர்ந்தான், "பிக்ஷாம் தேஹி" என்று.

துளி அன்னம் விழுமா விழுமா என்று வயிறு ஏங்கிக் கொண்டிருந்த சமயம். ராஜாவாக பஞ்சபக்ஷ்யம் சாப்பிட்டவன் பஞ்சத்தில்



# வட்ட மேஜை

இன்று காலை கல்கி வந்ததுமே ''பெண்மை வெல்க'' என்ற தலையங்கத்தைப் படித்தேன்.

இதுநாள் வரை இந்தியாவில் எந்தப் பத்தி ரிகையுமே பெண்களுக்குச் சொத்து வைத்துக் கொள்ளும் விஷயத்தில் சம உரிமை தரப்பட வேண்டும் என்று வலியுறுத்தாதது கண்டு நான் வியந்திருக்கிறேன். இந்த விஷயத்தைத் தாங்கள் தக்க சமயத்தில் கையாண்டு அழுத்த மான முறையில் தலையங்கம் தீட்டியிருப்பது பார்த்து மகிழ்ச்சி அடைகிறேன். மற்ற பத்திரி கைகளும் இதை வலியுறுத்தி மத்திய அரசின் கவனத்தைக் கவர முயல வேண்டும்.

சென்னை–4
6-5-76 ஏவி. மெய்யப்பன்

[மேற்படி தலையங்கம் சில வாரங்களுக்கு முன் சுயராஜ்யா ஆசிரியர் திரு ஆர். வேங்கடராமன் அப் பத்திரிகையில் எழுதிய தலையங்கத்தினை ஆதார மாகக் கொண்டு வரையப்பட்டது. முதல் பெருமை திரு ஆர். வி. அவர்களையே சேரவேண்டியது. —ஆர்]

எப்படியாவது பேட்டி கண்டு எதைச் சொன்னாலும் எழுதிவிடுவதா ? ஸ்ரீமதி மரகதம் சந்திரசேகர் அவர்களுக்கு வேண்டு மானால் ஐம்பது ரூபாய் சேலை இருபத்து இரண்டு ரூபாய்க்குக் கிடைக்கலாம்.

என் போன்றோருக்குப் பத்து ரூபாய்க்கு விற்கின்ற நல்ல நாலு முழ வேஷ்டி ரூ. 4.40, அல்லது ஐந்து ரூபாய்க்கோகூடக் கிடைக்க வில்லையே !

சென்னை – 44
14–5–76 மு. நடராஜன்

''இயேசுநாதர் ஜூடாஸ் ஆனார்'' என்ற இந்திக் கதையின் தமிழாக்கம் மிகவும் அரு மையாக அமைந்துள்ளது. கதையின் மொழி பெயர்ப்பாளர் திரு ரா. வீழிநாதனுக்கு இது கைவந்த கலை. இதுபோன்ற பிற மொழி களில் உள்ள கருத்துச் செறிந்த, பொருள் பொதிந்த கதைகளைத் தொடர்ந்து கல்கி இதழில் எதிர்பார்க்கிறேன்.

திருச்சி–2
16–5–76 கிருஷ்ணன்

விளையாட்டுச் சிறப்பிதழ் கண்டேன். அட் டைப் படத்திலிருந்து ஒவ்வொரு பகுதியை யும் ரசித்துப் படித்தேன்; ருசித்து மகிழ்ந் தேன். 'கிரிக்கெட்டில் பௌன்ஸர்கள் தேவையா? விவாத மேடை' பலே ஜோர்! 'விளையாடுகிறார் வள்ளியப்பா' 'வட்டார வீரர்கள்', 'உலகத் தரத்துக்கு உயர்வோம்' ஒவ்வொரு டாபிக்கும் ஏ ஒன். பிய்த்து வாங்கி விட்டார்கள்.

சென்னை–75.
20–5–76 வி.ச. வாசுதேவன்

---

அடிபட்டுத் துடித்துக் கொண்டிருக்கும்போது கடைசியில் கொஞ்சம் கஞ்சி கிடைத்ததென் ருல், சொல்லி வைத்தாற்போல் இப்போது யாசகர் வந்து விட்டார்.

ரந்தி தேவன் யாசகரைப் பார்த்தான். எப்படிப் பார்த்தான்? 'சனியன் பிடித்தவன், எங்கே வந்தான்?' என்று? இல்லை. சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனுகவே அந்தப் பிராம் மணனைப் பார்த்தான்.

'நல்லவேளை, இதை நானே சாப்பிடாமல் இந்த க்ஷணத்தில் இவர் வந்தாரே; நான் பகவதபசாரம் செய்யாமல் காப்பாற்றி ஞரே' என்று சந்தோஷித்தான். அவனுடைய பத்தினி புத்திரர்களும் உதார குணத்தில் அவனுக்குக் குறையாதவர்கள். ஆகையால் தங்களிடமிருந்ததைப் பங்கு போட்டுப் பிராம் மணனுக்கும் கொடுத்தார்கள். அது இவர் களுக்கே போதும் போதாததாகத்தான் இருந் தது. ஆனால் அதிலே கணிசமாக ஒரு பங்கு யாசகருக்குக் கொடுத்து அவரைத் திருப்திப் படுத்தி அனுப்பினர்கள்.

பாக்கியை ராஜ குடும்பத்தினர் சாப்பிட இருந்தபோது மறுபடியும் ஒரு யாசகன் முளைத் தான். இப்போது வந்தவன் நாலாம் வர்ணத் தவன். பசிக்கும் கருணைக்கும் வர்ணம், ஜாதி என்ற பேதங்கள் உண்டா என்ன? இவர்கள் ஏற்கனவே குறைந்து போய்விட்ட கஞ்சியி லிருந்தும், தாங்கள் கால் வயிறு சாப்பிட் டால் போதும் என்று கொஞ்சமே வைத்துக் கொண்டு பாக்கியை அந்தப் பிச்சைக்கார னுக்குக் கொடுத்து விட்டார்கள். ராஜாவின் கண்ணில் இவனும் விஷ்ணுவாகத்தான் தெரிந்தான்.

மிச்சமிருந்த கஞ்சியில் அவர்கள் தங்கள் தங்கள் பங்கைக் குடித்தார்கள். ரந்தி தேவன் மாத்திரம் இந்தச் சமயத்திலும் இரண்டு ஜீவன்களுக்கு உபகாரம் பண்ணும்படியாக பகவான் அநுக்கிரகம் செய்ததையே நினைத் துக்கொண்டோ என்னவோ, சாப்பிடாமல் யோசனையில் இருந்தான்.

இவனுக்குச் சாப்பிடுகிற எண்ணம் வந்த அதேசமயத்தில் மறுபடியும் ஒரு தீனக் குரல் வந்தது. மனுஷக் குரலோடு நாய்கள் குரைப்பு வேறு. நாய்களைப் பிடித்துக் கொண்டு ஒரு பாமரன் வந்து நிற்கிறுன் – இந்தக் கஞ்சிக் குத்தான் போட்டியாக வந்திருக்கிறுன்.

நாய்கள், நாய்க்காரன் எல்லோருமே ரந்தி தேவனுக்கு நாராயண ஸ்வரூபமாகத் தான் தெரிந்தார்கள். வேதத்தில் ஸ்ரீ ருத் ரத்தில் பரமேச்வரனை 'நாய்களின் உரு வத்தில் இருக்கிறவன்; நாய்களை வைத்திருக் கிற வேடனுக இருக்கிறவன்' என்று சொல்லி யிருக்கிறது. ரந்தி தேவன் வாஸ்தவத்தி லேயே அப்படி ஈச்வர ரூபமாகப் பார்த்தான்.

(தொடரும்)

---

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

லட்சக் கணக்கான வாசகர்களின் ஆவலைப் பூர்த்தி செய்ய

அமரர் **கல்கி** எழுதிய

# பார்த்திபன் கனவு

விரைவில்

**கல்கி**

இதழில் ஆரம்பமாகிறது

# இன்னாருக்கு இன்னாரென்று..!

தஞ்சை மணியன்

**பா**ச்சா என்ற பார்த்தசாரதியை முதன் முதல் நான் சந்தித்தது கர்நூலில்!

சென்னை மாகாணத்திலிருந்து ஆந்திரா பிரிந்தபோது தாற்காலிகத் தலைநகரமாகக் கர்நூல் திகழ்ந்தது. அந்தப் புதிய காபிடலில் அவசரக் கோலத்தில் அள்ளித் தெறிக்கப்பட்ட புள்ளிகளாக — டெண்டுகளும் ஏ.பி.சி.டி. என்று பல டைப்களில் பங்களாக்களும் உருவாயின. அதில் ஒரு பங்களாவில் நானும் மற்றொரு பங்களாவில் பாச்சாவும் இருந்தோம்! ஏதோ நாங்கள்தான் பங்களாவுக்குரிய அதிகாரிகள் என்று தப்புக் கணக்குப் போடாதீர்கள்! அடியேன் ஒரு "குக்". — கோர் ஆப் டெபுடி செகரடரி ஹோம் டிபார்ட்மெண்டு! அவன் கதையும் அதுதான்! கல்வி இலாகா காரியதரிசி ஓர் அய்யங்காரிடம் ஆர்டர்லி கம்–குக் பாச்சா! அவன் ஊரிலிருந்து வந்தபோது — ஸ்ரீவைகுண்டமோ, ஸ்ரீ முஷ்ணமோ மறந்துவிட்டது — வேடிக்கையாயிருந்தான்.

பெண்களே கண்டு பொறாமைப்படும் கட்டுக் குடுமி! நெற்றியில் லஜ்ஜையில்லாமல் தீட்டியிருந்த திரிசூரணம், மடி — ஆசாரம் — வகையறாக்களுடன். இருவரும் நண்பர்களானோம். கட்டுப்பெட்டியான அவனை 'அப்டுடேட்'டாக மாற்றும் பொறுப்பு எனக்கும் இன்னொரு நண்பன் ராமன் நம்பியாருக்கும் ஏற்பட்டது!

ஒரு நாள் நானும் நம்பியாரும் பாச்சாவை இருபுறமும் பிடித்து அலாக்காகத் தூக்கி ஒரு சைக்கிள் ரிக்ஷாவில் போட்டுக் கொண்டு பார்பர் ஷாப்புக்குப் போனோம். அங்குதான் 'முதல் புரட்சி' ஏற்பட்டது. பாச்சாவின் கற்றைக் குழல் — இடுப்பு வரை பளபளத்துத் தொங்கும் — தலை மயிர் கத்திரித்து எடுத்து ஏழுமலையானுக்குக் காணிக்கையாக மூட்டை கட்டி வைக்கப்பட்டது.

பாச்சா தனது பரம்பரை ஆஸ்தியே பறிபோனது போல் கதறினான். அவனது கதறலை லட்சியம் செய்யாமல் கச்சிதமான கிராப் வைக்கப்பட்டது. இந்த விழாவில் எங்களை விட மிக்க மகிழ்ச்சி அடைந்தவர்கள் பாச்சாவின் எஜமானரின் பெண்கள்தாம். ஏனென்றால் பிடரியைக்கூட எட்டாத எலிவால் கூந்தலுடன் திகழ்ந்த அவர்கள் தினமும் பாச்சா குளித்துவிட்டுத் தலையைக் கவிழ்த்துத் தரையை எட்டும் கூந்தலைத் துவட்டி உலர வைக்கும் காட்சியைப் பொறாமையுடன் பார்த்துச் சபித்துக் கொண்டிருந்தனர்.

ஆந்திர தேசமும், ஆந்திரப் பிரதேஷ் ஆகி காபிடல் கர்நூலிலிருந்து ஹைதராபாத்துக்குக் குடிபெயர்ந்தது. நாங்களும் குடிபெயர்ந்தோம்!

பாச்சாவின் ஆபிஸரை 'போர்ட் ஆப் ரெவினியூ'வுக்கு மாற்றிவிட்டார்கள். நான் எனது ஆபீசரைச் சாப்பாட்டுக்கு லாட்டிரி அடிக்கச் செய்துவிட்டு — அவர் ஒரு கட்டைப் பிரம்மசாரி — ஆபீசில் வேலை செய்து கொண்டு ஹோட்டல் சாப்பாட்டுடன் சாலர்ஜங் மியூஸியம், லேக் — கண்டிபேட் என்று சுற்றி வந்தபோது பாச்சாவைச் சந்தித்தேன்.

இடம் மொஹஜந்தி பஜார் — நயாபூல் என்ற அகன்ற கான்கிரீட் சாலையின் இருமருங்கும் அழகிய மன்ஜில்கள் (மாளிகைகள்) அவற்றினுள் மாலை ஏழு மணியிலிருந்து இரவு பன்னிரண்டு வரையில் அழகிகளின் கவாலி— இத்தகைய ஒரு மன்ஜிலில் அவனைச் சந்திக்கிறேன். மொசைய்க் ஹாலில் காஷ்மீரக் கம்பளம்! அரை வட்ட வடிவத்தில் உயர்ந்த திண்டு தலையணைகள் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை தொண்ணூறு வயதிலிருந்து பத்தொன்பது வயது வரை வெண் தாடிகளும் கருந்தாடிகளுமாக ஷெர்வானி குர்தா அணிந்து ஹுக்காவைப் புடுபுடு என்று உறிஞ்சியபடி 'வாஹ்வா! வாஹ்வா' என்று பாராட்டும் ரசிகர்கள். ஹால் நடுவே சாந்த் பீபி ரேஷ்மி பாவாடை குடை விரிக்க, தந்தக் கால்கள் சுழன்று வர நாட்டியம் ஆடிக் கொண்டிருக்கிறாள்.

அரை வட்டத்தின் நடுவே என் கண்கள் நிலைக் குத்தின. அவன் பாச்சாவேதான்! சூழ்நிலைக்கேற்றபடி ஷெர்வானியும், குர்தாவும் கால்களில் மூன் லைனவுக் காலணிகளும் அணிந்து கம்பீரமாக அமர்ந்திருந்தான்!.... கர்லிங் கிராப்பில் சில கற்றைகள் மக்மல் டோப்பியினுள்ளிருந்து எட்டிப் பார்க்கின்றன. ஆனாலும் அகன்ற மொழு மொழுத்த முகமும் வெண்மையான பற்களும் நாமமிட்டுத் தழும்பேறிய நெற்றியும் அவனை எனக்கு அடையாளம் காட்டின. அவனும் என்னைக் கவனித்துவிட்டான். வாயைப் பிளந்து கண்களை விரித்துப் பார்த்தான்.

"அடே பாச்சா!" என்று நானும், "ஓய் மணி!" என்று அவனும் கூவுவதற்குத் தடையாயிருந்தது இரண்டு காரணங்கள். ஒன்று நாங்கள் இருவரும் அசல் நவாபுகளாக உருமாறியிருந்தோம். அங்கு தமிழ் பேசியிருந்தால் தொலைந்தோம்!

கடந்த இரண்டு ஆண்டுகளில் நான் ஹைதராபாத்காரர்களைப் போலவே அடிவயிற்றிலிருந்து ஹூங்காரத்துடன் வரும் ஒரிஜினல் உருதுவை நன்றாகப் பயின்றிருந்தேன். அவனும் ஓரளவு சமாளித்தான்.

எனது அறைக்குச் சென்ற பின் சாவகாசமாகப் பேச ஆரம்பித்தோம். அவன்தான் பேச ஆரம்பித்தான். பிரச்னை அவனுடையது தானே!

அவனது அதிகாரியைப் பழையபடி செகரடேரியட்டுக்கு மாற்றி விட்டார்களாம். அவர் இரண்டு மாத லீவில் ஊருக்குப் போயிருக்கிறார்! இவன் என்னைப்போலவே சங்கடமான சமையலை விட்டு ஆபீஸ் பியூனாகி, உல்லாச

மாக வாழ்க்கையைக் கழித்துக் கொண்டிருக்கிறான்! அதுமட்டுமில்லே. அவனுக்குக் கல்யாணம் நிச்சயமாகி யிருக்கிறதாம்.

''டேய், மணி! இப்போத்தான் ஒன்னோட உபகாரம் தேவைப்படறது.''

''அச்சாரே பாச்சா! மாப்பிள்ளைத் தோழனாக உன்னோட வரணும். அவ்வளவுதானே? ஜமாய்ச்சுடலாம்!'' என்றேன்.

''அடே மணி! அவசரப்படாதே. நான் சொல்றதைப் பூராக் கேளு. எனக்குப் பார்த்திருக்கிற பொண்ணு நாங்குனேரியிலே பெரிய மிராசுதார் ஒருத்தரோட பொண்ணு. பணக்கார இடம். எனக்குக் கடிகாரம் மோதிரம் — பாத்திரம் பண்டம், புது ஹெர்குலிஸ் சைக்கிள் — இதோட வரதட்சிணை பத்தாயிரம் வரை தர்றதுக்கு ஒத்தின்டிருக்கா.'' எனக்குச் சந்தேகம் வந்து விட்டது. ஒரு பியூனுக்குக் கடிகாரம், மோதிரம், பத்தாயிரம் வரதட்சிணை! ஹூம், பயல் ஏதோ சரடுவிட்டிருக்கிறான்!

அவனே சந்தேக நிவர்த்தி செய்தான். ''ஹி! ஹி! நான் ஒரு லோயர் டிவிஷன் கிளார்க்குன்னு சொல்லி யிருக்கேன்!''

''அடி சக்கை!'' என்றேன். பயல் ஒரே ஒரு பொய்தான் சொல்லி யிருக்கிறான். அதுவும் பிரம்மாண்டமான பொய்!

''சரி மேலே சொல்லு!'' என்றேன்.



''நான் கர்நூலிலே வேலைக்குச் சேர்ந்ததிலே யிருந்து ஊருக்கு எழுதுகிற கடிதங்களிலெல்லாம் கிளார்க்குன்னுதான் எழுதி யிருக்கேன். அப்பா—அம்மா ஊர்க்காராளெல்லாம் நம்பிட்டா. போன மாசம் ஊரிலேயிருந்த கடிதாசு வந்தது. போய் இந்தப் பெண்ணைப் பார்த்தேன். எனக்கு ரொம்பப் பிடிச்சுடுத்து. அவளுக்கும் என்னைப் பிடிச்சிருக்குன்னுதான் நினைக்கிறேன்.''

''உன்னை யாருக்குத்தான்டா புடிக்காது? நீ ஆணழகன் ஆச்சே! ஆனால் கிளார்க்குன்னு ஏன்டா பொய் சொல்லித் தொலைச்சே?''

பாச்சா சிரித்தான். ''கிளார்க்குன்னு சொல்லாமே பியூன்னு சொல்லியிருந்தால் கழுத்தைப் பிடித்து ஒரே நெட்டா நெட்டி யிருப்பார் அந்த வரதாச்சாரி!''

''யார் அந்த மனிதர்? ஓ! வருங்கால மாமனாரா?'' பாச்சா என் இரு கைகளையும்பிடித்துக்கொண்டு கெஞ்சினான். (அவனுக்கு வேலையாக வேண்டுமென்றால் மரியாதை மாறும்) ''ஓய் மணி! நீர் மனசு வைச்சால் நடக்கும். வேறே ஒன்னும் செய்ய வேண்டாம். வர்ற பதினாறும் தேதி வெள்ளிக் கிழமை கீழ்த் திருப்பதியிலே நடக்கிறகல்யாணத்துக்கு...''

''கீழத் திருப்பதியா?'' என்று வாயைப் பிளந்தேன் நான்.

''ஆமாம், ஓய்! தெரிஞ்ச இடத்துலே நடந்தா தகராறு. எவனாவது வேண்டப்பட்டவன் வருவான். 'அடே பாச்சா! பியூனுன உனக்கு இந்த அதிர்ஷ்டமா?'ன்னு அலறுவான். கல்யாணம் காசி யாத்திரை ஆயிடும்! அதனாலே புது இடமா கீழத் திருப்பதியில் ஏற்பாடு பண்ணி யிருக்கேன்.''

''சரி! நீதான் புத்திசாலித்தனமா எல்லா ஏற்பாடுகளும் பண்ணிட்டியே. நான் செய்யறதுக்கு என்ன இருக்கு?''

''சின்ன உபகாரம்தான் ஓய்! கல்யாணம் நடக்கிற அன்னிக்கும் மறு நாளும் என்னோட இருந்து, கூடமாட ஒத்தாசை...''

''.... நீர் வந்து... இரண்டு நாட்களுக்கு ஒரு பியூனா வந்து... எனக்குப் பியூன் மாதிரி''

''புரிஞ்சுதடா! நீ ஒரு கிளார்க். உன்னோட கல்யாணத்துக்கு வந்த பியூன் நான்! ஆனால் வந்த இடத்திலேயும் பியூன் புத்தி என்னை



விடல்லே! எனக்கு மேல் உத்தியோகஸ்தனை கிளார்க் — உனக்குச் சின்னச் சின்னக் குற்றேவல்கள் செய்கிறேன். ' பார்க்கிறவா, 'ஆஹா! நம்ப பாச்சாவுக்கு என்ன கௌரவம்! மரியாதை'ன்னு பாராட்டணும். அவ்வளவுதானே!''

''அதுவேதான் ஓய் மணி! நீர் என்னோட ஐ்யேஷ்டன் மாதிரி. என்னைக் காப்பாத்தும் ஓய்!''

பாச்சா செய்திருந்த ஏற்பாடுகளின்படி, அவன் கிளார்க்காகவும் நான் அவனுக்கு வாலண்டியர் சர்வீஸ் செய்யும் பியூனாகவும் நாங்குனேரியாரையும் அவரது மகளையும் ஏமாற்றி விட்டோம். ஆனால் அங்கேயே சத்திரத்தில் இருந்த மனிதரை — அல்லது பாச்சாவின் விதியை ஏமாற்ற முடியவில்லை! அவர் ஆந்திர சர்க்கார் எண்டோமெண்ட் இலாகாவைச் சேர்ந்தவர். சத்திரத்தின் மானேஜர்! இந்த உண்மை ஏன் பாச்சாவின் மூளைக்கு எட்டவில்லை?

அந்த அதிகாரி—ஜெயராம நாயுடு அடிக்கடி ஆந்திர கல்வி இலாகாவுக்கு வந்து போவார். இவனை நன்றாகத் தெரியும். இந்தப் பயலுக்குக் கொஞ்சமாவது ஞாபக சக்தி வேண்டாமா?

தேங்காய், பழம், வெற்றிலை பாக்குகளின் நடுவே இருந்த ஐந்து சவரன் தங்கத்தில் மினுமினுத்த மாங்கல்யத்தை பய பக்தியுடன் தொட்டு ஆசீர்வதித்தபடி ஜெயராம நாயுடு உணர்ச்சி நெகிழ்ந்த குரலில் கூறினார்:

''ஈ பில்லவாடு நாகு பாக தெலுசுனு! எஜுகேஷன் டிபார்ட்மெண்டுலோ பியூனுகா உன்னாடு! ஒரே தம்புடு! ஒக ஐவானுடைய நீகு இந்த பெத்த சம்பந்தம் தொரிகினதி ஆ சீனுவாசுடு 'கடாட்சமே காதா?'' என்று கேள்வியுடன் அவர் முடிக்கவும் ஓர் எரிமலை வெடிக்கவும் சரியாக இருந்தது.

''பியூனா?'' என்று அலறி எழுந்தார் வரதாச்சாரி. நாலரை அடி உயரத்தில் குள்ளக் கத்தரிக்காய் போலிருந்த அவரது உருவம் கோபத்தால் குதித்து எகிறிக் கோபி கிருஷ்ண பாணியில் நர்த்தனமிட்டது. அடுத்த சில விநாடிகளில் பாச்சாவின் கனவுகள் பஞ்சாகக் காற்றில் பறந்தன!

''தாலி கட்டுகிற சமயத்திலே கல்யாணத்தை நிறுத்தாதீங்கோ! அபசகுனம்! புள்ளை பியூனாக இருந்தால் என்ன? கண்ணுக்கு லட்சணமா யிருக்கான். நம்ம மைதிலிக்கும் அவனைப் பண்ணிக்கிறதிலே இஷ்டம்தான்!'' என்று மங்[illegible] கோதை நாச்சியாரை (மிஸஸ் வரதாச்சாரி) ''அட!'' என்று ஒரு விழிப் பார்வையில் அடக்கினார்.

''வரதாச்சாரியார்! நன்னா யோசனை பண்ணுங்கோ! கடைசி நிமிஷத்திலே பொண்ணை இழுத்துண்டு போறதிலே யாருக்கு நஷ்டம்னு! என்னோட பிள்ளை ஆண்மகன்! இன்னிக்கில்லாவிட்டாலும் இன்னொரு நாள் அவனுக்குக் கல்யாணம் ஆகத்தான் போறது! ஆனா, பொண்ணைப் பெத்த நீர்!'' என்று யதார்த்த வாதம் புரிந்த பாச்சாவின் தகப்பனாரைச் சீற்றத்துடன் இடை மறித்தார் வரதாச்சாரி.

''கெணத்துலே தள்ளுவேன் ஓய்! ஒரு பியூனுக்குக் குடுப்பேனா! நீர் ஒரு மடைப் பள்ளிப் பரிசாரகரா யிருந்தாலும் உம்ம பையன் ஒரு கிளார்க் உத்தியோகம் பார்க்கிறான்னு நம்பித்தான் இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிச்சேன். ஆனால் மொதல்லியே உண்மையைச் சொல்லியிருந்தாலும் பரவாயில்லே! கடைசிவரை என்னை ஏமாத்தி— இவன் ஒரு கிளார்க்காம்! இவனுக்கு எடுபிடி இன்னொருத்தன் மணியாம்! எங்கே அவனைப் புடியும் ஓய்! திருட்டுப் பயல்கள்!—'' இப்படிப் பாச்சாவை வரதாச்சாரியிடம் மாட்டி விட்டு நான் அந்தர்த்தானமானது மூன்றாவது சந்திப்பு.

இதோ நான்காவது! இடம் பெங்களூர். கப்பன் பூங்கா. ராணி விக்டோரியா சிலை அருகே கடலையைக் கொறித்தபடி புல் வெளியில் அமர்ந்துகொண்டிருந்தேன் நான். எதிரே மகாத்மா காந்தி சாலையும் பிரிகேடியர் ரோடும் சந்திக்கும் திருப்பம். மாலை மறைந்து இருள் கவியும் நேரம். சரம் கோத்தது போல் வரிசையாக ஒளிர்ந்த மின் விளக்குகளின் ஒளியில் கார்களும் வாகனங்களும் பறந்து கொண்டிருந்தன. சில ஆங்கிலோ இந்திய அழகிகளும் வெளிநாட்டுப் பயணிகளும், ஒருசில உள்நாட்டு ஹிப்பி ஜதைகளும், குளிர்ந்த காற்றை அனுபவித்தபடி பார்க்கின் நுழை வாயில் போல் அமைந்த சிலையை நோக்கி வந்தனர். அதில் ஒரு ஜோடி! ஆ! ஓ மை காட்! பாச்சா! பெண்: மை காட்! மைதிலி!

அளவு கடந்த ஆச்சரியத்தில் பொதுப் பூங்கா என்பதையும் மறந்து, எழுந்து ஓடினேன்! ''டேய் பாச்சா!'' அவனது முதுகில் விழுந்த அறையின் சத்தத்தால் முகம் சுளித்தாள் மைதிலி. மறு கணம் அவளது விழிகளும் விரிந்து மலரத் தொடங்கின.

''ஓய் மணி! என்ன ஆச்சரியம் ஐயா!'' என்று என் பிடரியில் முழங்கையை வளைத்து நெருக்கினான். என் விழிகள் பிதுங்கின.

''பாச்சா! பாச்சா!'' என்றுஅலறி விடுவித்துக்கொண்டேன்.

''ஓய்! முதல்லே இன்னிக்கு நாம இதைக் கொண்டாடணும். நீரே ஒரு நல்ல ஹோட்டல் செலக்ட் பண்ணணும்!''

''ஒட்டல் ஏர்லைன்ஸ்!'' என்று பணிச் சென்று கூறினேன். அடுத்த கால் மணி நேரத்தில் நாங்கள் ஒட்டல் ஏர்லைன்ஸ் புல்வெளியில் பிரம்பு நாற்காலியில் அமர்ந்து சௌ சௌ பாத்தை ருசித்துக் கொண்டிருந்தோம்! எங்கள் உரையாடலில் புதிர் அவிழ்ந்தது.

பருந்திடம் கோழிக் குஞ்சை ஒப்படைத்தது போல் நாங்குநேரியாரிடம் இவனை ஒப்படைத்து ஊருக்கு வந்த நான் அடுத்த மாதமே எஸ். டி. ஆக்டிங் ஹைதராபாத்திலிருந்து மைசூர் மாநிலத்துக்கு மாற்றல் ஆகி வந்து விட்டேன். நான் வந்த இரண்டாண்டுகளுக்குப் பின் பாச்சாவும் மிஹூச்கலவல் புரான்ஸ்பரில் வந்திருக்கிறான். ஆனால் இன்று தான் இருவரும் சந்திக்கிறோம். (இதற்குள் எட்டு ஆண்டுகள் ஓடிவிட்டன!)

நான் ஓரளவு தயக்கத்துடன் ஆனால் ஆவலைக் கட்டுப்படுத்த இயலாமல் ''ஏண்டா பாச்சா! நீதான் பியூன் ஆச்சே! உன்னோட

கல்யாணம் நின்னு போனதே அதனால் தானே? பின்னே எப்படி?... அதாவது...'' என்று எனது இரு ஆட்காட்டி விரலையும் சேர்த்தபடி மைதிலியைக் குறிப்பாகப் பார்த்துக் கேட்டேன்.

பாச்சா பல்லைக் காட்டி, பழைய பாணியில் சிரித்தபடியே கூறினான்: ''ஓய், நான் வேலைக்குச் சேர்ந்தபோதே எஸ். எஸ். எல். சி. பெய்லுங்கிறது உமக்குத் தெரியும். கல்யாணம் நின்னு போன அன்னிக்கு வைராக்கியம் பண்ணினேன். அடுத்த வருஷமே எஸ். எஸ். எல். சி. பாஸ் பண்ணினேன். கிளார்க் ஆனேன். பெங்களூருக்கு வந்த அதே வருஷம் அப்பர் டிவிஷன் கிளார்க் ப்ரமோஷன் வாங்கிண்டுதான் வந்தேன்! அப்புறம்தான் கல்யாணம்கிற நினைவு வந்தது. ஒரு நாள் பேப்பரில் 'மாட்ரிமோனியல்' விளம்பரத்தைப் பார்த்தேன். சுமார் இருபத்தெட்டு வயதுள்ள அய்யங்கார் பெண்ணுக்கு வரன் தேவைன்...னு...! போய்ப் பார்த்தால் பழைய மைதிலி ஓய்! தேறா! தேறா!''

மைதிலி அதுவரையில் நாணத்துடன் தலை குனிந்திருந்தவள் புன்முறுவலுடன் என்னைப் பார்த்தாள்.

நான் கேலிச் சிரிப்புடன் இடை மறித்தேன்: ''அதாவது நீங்கள் மனசால் வரிச்ச மணாளனை அடைய முடியலியேங்கற ஏக்கம் இத்தனை வருஷமா வந்த வரன்களை நிராகரிக்கச் செய்த இவனுக்காகவே காத்திருக்கச் செய்தது இல்லையா?''

''தேற! தேற!'' என்று மறுபடியும் இளித்தான் பாச்சா! ''போன வருஷம்தான் எங்க கல்யாணம் குசாலாம்பாள் சத்திரத்திலே தடபுடலா நடந்தது! உம்மை ரொம்ப நினைச்சுண்டேன் மணி!''

''நீ கூப்பிட்டாக்கூட நான் வந்திருக்க மாட்டேன்! உன் மாமனார் பழைய ஞாபகத்திலே 'ஓய்–புடியும் அந்த மணியை'ன்னு என் மீது பாய்ந்திருப்பாரே!''

மைதிலி பக்கென்று சிரித்து விட்டாள். ''அதெல்லாம் இல்லே! எங்கப்பா அன்னிக்கு நடந்ததுக்கு ரொம்ப வருத்தப்பட்டு இவரண்டை ரொம்ப மன்னிப்புக் கேட்டுண்டார். இவரோட வைராக்கியம் உண்மையிலேயே இவரைக் கிளார்க்கா மாத்தி யிருக்கிறதைப் பார்த்து அவருக்கு ரொம்பப் பெருமை! பார்க்கிற பேரிடமெல்லாம் இப்ப அவரே 'என்னோட மாப்பிள்ளை பியூனா இருந்து படிச்சு முன்னுக்கு வந்தவர்'னு பெருமையடிக்கறார்!''

''டேய் மணி! ஒன்னோட கதை என்ன?''

''எனக்கு ஏதோ ஒரு நாட்டுப்புறம் கழுத்தை நீட்டித்து. நாலு குழந்தைகள்! அதே பியூன் உத்தியோகம் தான்! ஏதோ பொழுது இருக்கறப்போ ஏதாவது கிறுக்கிப் பத்திரிகைகளுக்கு அனுப்புவேன்!''

''அப்ப இந்தக் கதையையும் கிறுக்கி அனுப்பேன்!'' என்ற அவனது வேண்டுகோளுக்கு அருகில் எங்கோ ஓரிடத்திலிருந்து டிரான்ஸிஸ்டர், ''இன்னாருக்கு இன்னாரென்று எழுதி வைத்தானே!'' என்று அடி எடுத்துக் கொடுத்தது.



திருமலை செல்லும் யாத்திரிகர் கவனிக்க:

# திருப்பதிக்கும், திருமலை மேல் போவதற்கும் வாகன வசதிகள்

இந்தியாவிலுள்ள எந்த ஸ்டேஷனிலிருந்தும் நேராகத் திருமலைக்கே ரெயில் டிக்கெட் டுகள் வாங்கலாம். திருப்பதிக்கு நேரடி ரெயில் போக்குவரத்து வசதிகள் உள்ளன.

சென்னையிலிருந்து. (பாலாஜி எக்ஸ்பிரஸ், பிராட்கேஜ்) விஜயவாடாவிலிருந்து, (திருமலா எக்ஸ்பிரஸ், பிராட்கேஜ்) காக்கினடாவிலிருந்து, (பாஸஞ்சர் ரெயில், பிராட்கேஜ்) ஹைதராபாத்திலிருந்து. (வேங்கடாத்ரி எக்ஸ்பிரஸ், பிராட்கேஜ்) திருச்சிராப்பள்ளியிலிருந்து. (துரிதப் பாஸஞ்சர் ரெயில், மீட்டர் கேஜ்)

பாக்காலா, காட்பாடி, ரேணிகுண்டா, கூடூர் போன்ற பல ஜங்ஷனிலிருந்து திருப்பதி செல்ல வசதியாகத் தொடர்பு ரெயில்கள் பல உள்ளன.

இந்தியாவிலுள்ள எந்த ஸ்டேஷனுக்கும் திரும்பும் பிரயாணத்துக்கான டிக்கெட் டைத் திருமலையிலேயே வாங்கிக் கொள்ளலாம்.

சென்னை, ஹைதராபாத் ஆகிய நகரங்களிலிருந்து இந்தியன் ஏர் லைன்ஸ் விமானம் திருப்பதிக்கு வழக்கமாகச் செல்கிறது. விமானத் தளத்திலிருந்து பிரயாணிகளைத் திருமலைக்கு அழைத்துச் செல்லவும் திரும்பவும் அவர்களே சிறப்புப் பஸ்களையும் வைத்திருக்கின்றனர்.

200 மைல் சுற்றளவுக்குள் உள்ள முக்கிய நகரங்களிலிருந்தும் திருப்பதிக்கு நேரடி பஸ் போக்குவரத்து வசதிகள் உள்ளன. பஸ்ஸிலும் ரெயிலிலும் வரும் தொலை தூரப் பயணிகளை உடனுக்குடன் திருமலைக்கு ஏற்றிச் செல்லத் தொடர்பு பஸ்கள் இருக்கின்றன.

அதிகாலையிலிருந்து, இரவு நெடுநேரம் வரையில் மூன்று நிமிஷங்களுக்கு ஒரு பஸ் திருப்பதியிலிருந்து திருமலைக்குத் தொடர்ந்து செல்கின்றன. இரண்டு வகையான பஸ் வசதிகள் உள்ளன. 'கியூ' முறையில் காத்திருந்து பஸ் ஏறும் முறைக்கு, ஆளுக்கு ரூ. 2/- ரூபாய் கட்டணம்; காத்திருக்க வேண்டிய அவசியமில்லாமல் முன்கூட்டியே ரிஸர்வ் செய்து கொண்டு செல்வதற்கு ஆளுக்கு 3 - ரூபாய் கட்டணம்.

ஆந்திரப்பிரதேச மாநிலப் போக்குவரத்துக் கார்ப்பரேஷன், 45 பேர் உட்காரும் வசதியுள்ள ஒப்பந்த ஊர்தியை, திருப்பதிக்கும் திருமலைக்கும் ஒரு பஸ்ஸுக்கு, ஒருவழி பிரயாணத்துக்குமட்டும் 135/- ரூபாய் வாடகையில் ஓட்டுகிறது.

கண்ணுக்கினிய காட்சிகள் அமைந்த ஏழுமலை மார்க்கத்தில் திருமலைக்குச் செல்ல இரண்டு நடைபாதைகள் உள்ளன. வேண்டுதல் காரணமாக அநேகப் பக்தர்கள் இந்தப் பாதைகளில் ஏறிவரும்போது வழியிலுள்ள புகழ்பெற்ற தெய்வமூர்த் தங்களையும் தரிசிக்கிறார்கள்.

மேலேறும் வண்டிக்கு ஒன்றும், இறங்கும் வண்டிக்கு மற்றொன்றுமாக, உன்னத மான இரண்டு மலைச்சாலைகள் இருக்கின்றன. சொந்தக்கார்களும் இந்தச் சாலையில் செல்ல அநுமதிக்கப்படுகின்றன, டாக்ஸிகளும் கூடக் கிடைக்கின்றன.

நிர்வாக அதிகாரி
திருமலை, திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி.

## அத்தியாயம் 15

# பிரியா விடை!

**ப**வானிக்குப் புதிதாகக் கார் சென்னையிலிருந்து வந்து சேர்ந்தது. அவள் ஏற்கனவே கார் ஓட்டப் பழகி லைசென்ஸும் பெற்றிருந்தாளாதலால் அது வந்து சேர்ந்ததுமே எங்கேயாவது புறப்படத் தீர்மானித்தாள். எங்கே போவது என்று எண்ணிய மாத்திரத்தில் ஏலமலைப் பாதையில் மறுபடியும் உயரே ஏறிச் செல்ல வேண்டும் என்று தோன்றியது.

அந்த மலையில் ஆங்காங்கே உள்ள குக்கிராமங்களில் இன்னமும் சி. ஐ. டி.க்கள் வந்து விசாரிக்கிறார்களா? அவர்கள் தேடும் நபர் இன்னார் என்று கண்டுபிடித்து விட்டார்களா? தோல்வி அடைந்து திரும்பி விட்டார்களா? அல்லது ஒருவேளை தாங்கள் தேடும் நபர் மாஜிஸ்திரேட் கோவர்த்தனன் தான் என்ற முடிவுக்கு வந்து அவரைக் கைது செய்யத் தயங்கி மேலிடத்து உத்தரவு பெறத் திரும்பி விருக்கிறார்களா? இப்படியெல்லாம் பலவிதக் கேள்விகள் பவானியின் உள்ளத்தில் எழுந்தன. அவற்றுக்கு விடையை அந்தக் கிராமங்களில் விசாரித்தால் அறியலாம் எனவும் எண்ணினாள். பதில்களைத் தெரிந்து கொள்ளும் ஆவலைக் கட்டுப்படுத்திக் கொள்ளவும் அவளால் முடியவில்லை.

கல்யாணத்தையும் பின்னோடு அழைத்துச் சென்றால் நல்லது. பேச்சுத் துணையாக இருக்கும். ஆனால் கல்யாணம் ஹைகோர்ட்டில் நடந்து வந்த ஒரு வழக்கு விஷயமாக அவன் அப்பாவின் ஆணையை ஏற்றுச் சென்னை சென்றிருந்தான். புறப்படுவதற்கு முன் பவானியிடம் வந்து விடைபெற்றுக் கொண்ட காட்சியை இப்போது எண்ணினாலும் பவானிக்குச் சிரிப்பு வந்தது.

பிரிவாற்றாமையால் காதலி வருந்துவாளோ என்று கலங்கிய காதலன் போல, ''கவலைப் படாதீர்கள், இரண்டே நாட்கள்தான். உடனே திரும்பி விடுவேன். உங்கள் நினைவாகவே இருப்பேன்'' என்று அவன் திரும்பத் திரும்பக் கூறினான்.

பவானி, ''எதற்கு இத்தனை சமாதானம் சொல்கிறீர்கள்? நான் உங்களைப் பிரிந்து தவித்து உருகிவிடப் போவதில்லை'' என்றாள்.

கல்யாணத்துக்கு முகம் வாடிவிட்டது. ''சேச்சே, நான் அதற்குச் சொல்லவில்லை. நாடக ஒத்திகையெல்லாம் தாமதமாகிறதே, அதை எண்ணித்தான் கவலைப்பட்டேன்'' என்று சமாளித்தான்.

பவானிக்குப் பாவமாக இருந்தது. ஆறுதலாகப் பேசினாள். ''பாதகமில்லை. நீங்கள் இல்லாவிட்டாலும் இருப்பதாகவே பாவித்து ஒத்திகைகளைச் சரியாக நடத்துகிறோம். அரங்கேற்றம் குறித்த நாளில் ஜாம் ஜாம் என்று நடக்கும். ஒரு குறையும் நேராது.''

''சரி. அப்போ நான் போய் வரட்டுமா? உம்... வருகிறேன்... சீக்கிரம் திரும்பிவிடுகிறேன்... வரட்டுமா?'' தயங்கித் தயங்கி நின்றான் கல்யாணம். லேசில் கிளம்ப மாட்டான் போலிருந்தது.

''சென்று வாருங்கள்! வென்று திரும்புங்கள். வெற்றித் திலகமாக நெற்றித் திலகமிட்டு அனுப்பி வைக்கட்டுமா?'' என்றாள் பவானி நாடக பாணியில். டயலாக்குக்கு ஏற்ப நடிக்கவும் செய்தாள் வேடிக்கையாக.

கல்யாணத்துக்குச் சற்று முன் ஏற்பட்ட தாபம் தீர்ந்து உச்சி குளிர்ந்து விட்டது. ''சாமானிய கேஸ் இல்லை இது. பெறப் போவது மாபெரும் வெற்றி. உங்கள் வாழ்த்து என் நெஞ்சுடன் இருக்குமாதலால் நான் வெல்வதும் உறுதி'' என்று உற்சாகமாகக் கூறிச் சென்றான்.





அமரர் கல்கி

அதையெல்லாம் இப்போது நினைத்துச் சிரித்துக் கொண்டாள் பவானி. 'கல்யாணம் தான் ஊரில் இல்லே. அவர் அப்பாவையாவது பார்த்து வைத்தால் என்ன?' என்று அவளுக்குத் திடும்மென்று தோன்றியது. 'அவர் வீட்டுக்கு இதுவரையில் போனதே இல்லையே நான். இந்த ஊருக்கே பெரிய மனிதர்; பிரசித்தி பெற்ற வழக்கறிஞர். மரியாதைக் காகவாவது ஒரு தடவை போய்ப் பார்க்க வேண்டாமா? ஏலமலைக்கு இன்னொரு சமயம் போய்க் கொண்டால் போகிறது. இருள் கவிகிற நேரத்தில் மலை ஏறுவதை விடப் பகல் போதில் செல்வது நல்லது. தக்க துணையுடன் போவதும் உசிதம்தான். கோர்ட் விடுமுறை நாளில் மாமாவையும் அழைத்துக்கொண்டு போகலாம். இப்போது ஹோம்ரூல் கோபால கிருஷ்ண முதலியாருக்கு நமது மரியாதை களைச் சமர்ப்பித்து விட்டு வருவோம்.'

எண்ணத்தை உடனே செயலாக்கத் துணிந்து கிளம்பினாள் பவானி. புது கார் பாங்காக ஓடியது. உள்ளத்தைக் குடைந்து கொண்டிருந்த கவலைகளை மீறி ஓர் உற்சாகம் பிறந்தது அவளுக்கு.

ஹோம்ரூல் கோபாலகிருஷ்ணன் தம் ஆபீஸ் அறையில் உட்கார்ந்து கேஸ் கட்டுக் களைப் படித்துக் கொண்டிருந்தார். சற்று நேரம் உன்னிப்பாகப் படித்தபிறகு அந்தத் தாள்களை முன்னும் பின்னுமாகப் புரட்டி நோட்டம் விட்டபடியே தமக்குத் தாமே பேசிக் கொள்ளவும் ஆரம்பித்தார்.

''சட்டம் ஒரு கழுதை என்று சொல்கிறது சரியாகத்தான் இருக்கிறது. கீழ்க் கோர்ட்டு தீர்ப்பு இரண்டு வருடக் கடுங்காவல். அப்பீல் கோர்ட்டிலே தீர்ப்பு குற்றமே ருசுவாக வில்லை; கேஸ் டிஸ்மிஸ்! ஹைகோர்ட்டிலே தீர்ப்பு மறுபடியும் அடியிலிருந்து விசாரணை நடத்தணும்! எப்படி இருக்கிறது, கதை? சட்டத்தைக் கழுதை என்று சொல்வதிலே என்ன தப்பு?...''

இத்தருணத்தில் காலடி ஓசை கேட்கவே நிமிர்ந்த கோபாலகிருஷ்ணன், ''அடேடே! நீயா, பூஜை வேளையிலே கரடி நுழைந்த மாதிரி...'' என்றார்.

அவர் மனைவி அறைக்குள் முன்னேறிய வாறே, ''ஆமாம், கழுதை, கரடி, குரங்கு இன்னும் என்னென்ன சொல்லணுமோ சொல் லுங்கள்...'' என்றாள்.

''அடேடே உன்னைச் சொல்லலேடி பழ மொழியைச் சொன்னேன்... இருக்கட்டும், இப்போ நீ எதற்காக வந்தே? நான்தான் ரொம்ப வேலையாக இருக்கேன்னு தெரியுமே? உன் பிள்ளையானால் டிராமா, காலட்சேபம்னு போயிடறான். ஒரு நிமிஷம் வீட்டிலே இருந்து உதவ மாட்டேன் என்கிறான். அவனை ஹைகோர்ட் கேஸ் விஷயமாக மெட்ராஸுக்கு அனுப்புவதற்குள் போதும் போது மென்றாகி விட்டது. ஆயிரம் சால்ஜாப்பு சொன்னான். எனக்கு மெட்ராஸுக்கும் ராமப்பட்டணத்துக்குமாக அலைய முடிகிறதா சொல்லு. ஏதுடா அப்பாவுக்கு வயதாகி விட்டதே, நாம் கொஞ்சம் கேஸ்களைப் பார்த்து உதவி பண்ணுவோம் என்ற எண் ணம் துளிக்கூட இல்லே.''

''உங்களுக்கு என்ன அப்படி வயதாகி விட்டது?'' என்றாள் செல்லம்.

''போன வருஷம் ஐம்பது; இந்த வருஷம் நாற்பத்தொன்பது அவ்வளவுதான். உன் இளமைத் தோற்றத்துக்கு ஏற்ப நான் வருஷா வருஷம் வயசைக் குறைச்சுண்டுதானே வர ணும்?''

''போதும் பரிகாசம்! கல்யாணம் என் றைக்குத் திரும்பி வருகிறான் என்று கேட்கத் தான் வந்தேன். இனிமேல் இந்த வீட்டில் ஒரு நிமிஷம் கூட என்னால் இருக்க முடியாது. வந்திருக்கிறவர்களுக்கெல்லாம் பதில் சொல்ல என்னால்முடியவில்லை. உங்கள் பிள்ளைக்கு ஒரு கல்யாணத்தை யாவது இதற்குள் பண்ணி வைத்திருந் தால்...''

''வைத்திருந்தால் என்ன? மாமியாரும் மருமகளும் ஓயாமல் சண்டை போட்டுக் கொண்டிருப்பீர்கள். உங்கள் கேஸிலே வாதாடறதுக்குத் தான்அப்பா பிள்ளை இரண்டு பேருக்கும் பொழுது சரியாக இருக்கும்.''



''இப்போ மாத்திரம் புரட்டி விடுகிறீர்களாக் கும்? பொழுது விடிந்து ஒரு கட்சிக்காரனைக் கூடக் காணோம்.''

''நீயே போய் ஊரெல்லாம் சொல்லி விட்டு வருவாய் போலிருக்கே? என்றாவது ஒரு நாள் இப்படித்தான் இருக்கும்.''

இத்தருணத்தில் வாசலில் ஹாரன் சத்த மும் தொடர்ந்து கார் என்ஜின் ஒரு முறை உறுமிவிட்டு ஓயும் சத்தமும் கேட்டது.

''பார்த்தாயா? நீ சொல்லி வாய் மூடு வதற்குள் கட்சிக்காரர் யாரோ வருகிறார்?''

வாசலிலிருந்து ''ஸார்!'' என்று குரல் கேட்டது.

''நீ உள்ளே போ சீக்கிரம்'' என்றார் ஹோம்ரூல் கோபாலகிருஷ்ணன். ''காரிலே

யாரோ பெரிய மனிதர்கள் வந்து இறங்கியிருக்கிறார்கள்.''

''எதற்கு இப்படி விரட்டறேன்? பெண் பிள்ளைக் குரல் மாதிரி இருக்கே?''

''இருக்கட்டுமே! அதனால் என்ன? பெண்களுக்கு வக்கீலை நாட வேண்டிய பிரமேயமே இருக்காதா? இடத்தைக் காலி பண்ணு. சீக்கிரம். உம்!''

செல்லம்மாள் திரும்பித் திரும்பி இரண்டு தடவை பார்த்துக் கொண்டே வேண்டா வெறுப்பாக உள்ளே போனாள். முதலியார் மிகக் கவனமாகக் கேஸ் கட்டைப் படிக்கத் தொடங்கினார்!

## அத்தியாயம் 16

# ஜின்னா தோற்றார்!

**வ**ந்தவள் பவானி. அவள் சற்று நின்று பார்த்துவிட்டுப் பெஞ்சில் அமர்ந்தாள். அப்படியும் முதலியார் தலை நிமிரவில்லை. தொண்டையைக் கனைத்துக் கொண்டு ''வக்கீல் ஸார் ரொம்பப் பிஸியாக இருக்கிறாப்போலிருக்கு'' என்றாள் பவானி.

முதலியார் நிமிர்ந்து பார்த்துத் திடுக்கிட்டார்.

எழுந்து நின்று, ''வரணும்... வரணும்...நீங்க வந்ததை நான் பார்க்கவே இல்லை. என்ன சேதி? எப்போ வந்தீங்க? அடே நாற்காலி! பியூனைக் கொண்டாடா! சேச்சே! அடே பியூன் நாற்காலி கொண்டாடா!''

''வேண்டாம். பெஞ்சே சௌகரியமாயிருக்கு'' என்றாள் பவானி.



''அந்த மடையன் பியூன் யாராவது வருகிற சமயம் பார்த்து எங்கேயாவது தொலைஞ்சு போயிடறான். குமாஸ்தாவுக்கு இன்றுதான் திவசம். அவனும் வரவில்லை.''

''குமாஸ்தாவுக்கா ஸார் திவசம்? காலமாகி ரொம்ப நாள் ஆச்சோ?''

''இல்லை; இல்லை. குமாஸ்தாவின் தாயாருக்குத் திவசம். அது போனால் போகட்டும். எங்கே வந்தீர்கள்? என்ன விஷயம்?''

''ஒன்றுமில்லை ஸார்! சும்மாத்தான். புது கார் இப்பத்தான் வந்தது. ஒரு டிரைவ் போகலாம் என்று கிளம்பினேன். இந்த ஊரில் என்ன மெரினாவா? மவுண்ட் ரோடா? என்ன இருக்கிறது புதுக் காரைப் பெருமையுடன் ஓட்டிப் போக? பெரும்பாலும் கூடைப் புழுதி எழுப்புகிற கப்பி ரோடுதான். ஆகவே ஹோம்ரூல் கோபாலகிருஷ்ண முதலியார் வீட்டுக்குப் போய்க் கொஞ்சம் ஜம்பம் அடித்துக்கொண்டு வரலாமே என்று தோன்றியது. புறப்பட்டு விட்டேன். உங்க மகன் கல்யாணத்திடமும் சொல்லியிருந்தேன், புதுக் கார் வரப்போகிறதென்று.''

''ஜனி. அவன் மெட்ராஸ் போயிருக்கான்.''

''தெரியுமே! என்னிடம் சொல்லிக் கொண்டுதான் கிளம்பினார். அவரைப் பார்க்க நான் வரவுமில்லை. உங்கள் ஆசீர்வாதத்தைக் கோரித்தான் வந்திருக்கேன். இந்தப் பக்கத்தில் லீடிங் லாயர் நீங்க. இந்த ஊருக்கு வந்ததிலிருந்து நான் உங்களைச் சந்தித்துப் பேசினதே இல்லை. மரியாதைக்காவது வந்து பார்க்கணும் என்று ரொம்ப நாட்களாய் எண்ணம். இன்று புதுக் காரும் வரவே...''

''எதற்காக என்னைப் போய்ப் பிரமாதமாகப் புகழ்கிறீர்கள்?'' என்றார் கோபாலகிருஷ்ணன். ''ஊர் முழுதும் பவானி என்ற பெயரைக் கேட்டாலே 'ஓஹோஹோ' என்கிறார்கள். கோர்ட்டுக்கு நான் வரும்போது சில சமயம் உங்களைச் சுட்டிக் காட்டி இன்னாரென்று என்னிடம் சக வக்கீல்கள் சொல்லியிருக்கிறார்கள்.''




**குளுகுளு எழுத்து!**

**பஸ்ஸில் இரண்டு மாணவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன்.**

**''ஆங்கில எழுத்துக்களிலேயே மிகவும் குளிர்ச்சியானது எது?''**

**''தெரியலையே!''**

**'' 'B' தான். ஏனென்றால் அது 'AC'க்கு இடையில் உள்ளது!''**

கேட்டவர்: ராமு

''நல்ல வார்த்தைகளாகத்தானே ஸார் பேசினார்கள் என்னைப் பற்றி? குற்றம் குறை ஒன்றும் கூறவில்லையே?''

''கிராஸ் எக்ஸாமினேஷனைக் கிளாஸா, நீங்க நடத்தறதாக் கேள்விப் பட்டேன். அப்படிப்பட்டவர் என்னைத் தேடி வருவதென்றால் அது என் பாக்கியம்தான்'' ,என்றார் கோபாலகிருஷ்ணன்.

''விளையாட்டுக்குக்கூட இப்படி நீங்க உங்களையே குறைத்துப் பேசிக் கொள்ளக் கூடாது. அனாவசியமாக என்னைத் தூக்கி வைக்கவும் வேண்டியதில்லை. நான் இந்தத் தொழிலுக்குப் புதுசு. உங்களைப் போன்றவர்கள் என்னை 'கைட்' பண்ணணும். அடிக்கடி ஏதாவது சந்தேகங்கள் சட்டப் பாயிண்டிலே தோன்றும். நீங்க க்ளியர் பண்ணணும். உங்கள் மகளைப் போல் நினைத்துக் கொள்ளுங்கள். என்ன சரிதானா?''

''அதற்கு என்ன ரொம்ப சரி!''

''இப்போ கூடப் பாருங்க, உங்க அட்வைஸைக் கேட்டுக் கொண்டு போகலாம் என்றுதான் வந்தேன், ஒரு விஷயமா.''

''சொல்லுங்கள்.''

'' 'ஏ' வந்து 'பி'யைக் கத்தியால் குத்தினால் அது கொலை முயற்சி. ஆனால் சும்மா கத்தியைக் காட்டிப் பயமுறுத்தினால்...?''

''சட்டப்படி அதுவும் தப்புத்தான். ஆனால் 'மோடிவ்' நிரூபிக்கப்படணும். சும்மா விளையாட்டாப் பேசிக்கிட்டிருந்தோம்னு சொல்லி 'ஏ' தப்பிக்கப் பார்க்கலாம். கத்தியால் மிரட்டி விரும்பத் தகாத இன்ன காரியத்தை 'ஏ' சாதித்துக் கொண்டான் என்பதாக நிரூபிக்கணும்.''

'' 'ஏ' சொல்கிறார், ' 'பி' என்னை எஸ்டேட் ஆட்களை விட்டு அடிக்கப் போவதாகப் பயமுறுத்தினான்; அதனால்தான் நான் கத்தியைக் காட்டி அவனை மிரட்டினேன்' என்று.''

''என்ன இதெல்லாம்? உங்க நாடகத்திலே வருகிற காட்சியா? கல்யாணம் எழுதின நாடகத்திலே நீங்க சஸ்பென்ஸ் சேர்க்கறீங்களா?''

''இல்லை சார்! என் வாழ்க்கையே ஒரு பெரிய சஸ்பென்ஸாக இருக்கு.''

''யார் உங்களை மிரட்டுகிறார்கள்? என்ன விஷயம்?''

''எதுவுமே எனக்கு நிச்சயமாகத் தெரியலே. உறுதிப்படுத்திக் கொள்ள முடியாததால் எந்த ஒரு நபர் மீதும் குற்றம் சுமத்தவும் தயக்கமாயிருக்கு. ஆனால் மனம் மட்டும் கிடந்து அடித்துக் கொள்கிறது. ஏதோ விபரீதம் நேரப் போகிறது அதுவும் என் காரணமாக நிகழப் போகிறது என்று.''

ஹோம் ரூல் கோபாலகிருஷ்ணன் அவளை உற்றுப் பார்த்தார். ''நீ ரொம்பக் குழப்பம் அடைந்திருக்கிறாய்'' என்றார்.

''அப்பாடா, புரிந்து கொண்டுவிட்டீர்களே'' என்றாள் பவானி. ''என் மனசோடு ஒப்பிடும்போது ஜின்னாவின் முஸ்லிம் லீக் கொள்கைகள் கூட ரொம்பத் தெளிவானதாகத் தோன்றும். அத்தனை குழப்பம்!''

''ஐயோ பாவம்.''

''ஆமாம், ஸார்! ஜின்னாவை நினைச்சாலே ரொம்பப் பரிதாபமாகத்தான் இருக்கு'' என்று சிரித்துக் கொண்டே கூறிய பவானி,

கோபாலகிருஷ்ணனை நோக்கி அடுத்த கேள்விக் கணையை வீசினாள்: ''ஸார்! இன்னொன்று கேட்கிறேன். ஒரு நபரை உத்தமர் என்று நமக்கு மிக நன்றாக, உறுதியாகத் தெரியும். ஆனால் அவர் பெரிய குற்றம் புரிந்து விட்டதாக நிதர்சனமாகச் சாட்சியம் இருக்கிறது. அந்தச் சமயத்தில் ஒரு வக்கீலின் கடமை என்ன? சாட்சியத்தின்படி நடப்பதா? அல்லது மனச்சாட்சிப்படி நடப்பதா?''

நோமினல் கோபாலகிருஷ்ணன் தலையைச் சொறிந்து கொண்டார். ''நடந்ததை நடந்தபடி விவரித்தால் தேவலாம். இப்படி மர்மமாகக் கேட்டால் என்ன பதில் சொல்வது?''

''சரி, அது வேண்டாம். இதற்குப் பதில் கூறுங்கள்: ஒரு மனுஷன் அவ்வளவாக நல்ல சுபாவம் உள்ளவன் இல்லை. அவனோடு பழக வேண்டாம் என்று அறிவு எச்சரிக்கிறது. ஆனால் மனம் அறிவுக்குக் கட்டுப்படாமல் எதனாலோ அவன்பால் ஈர்க்கப்படுகிறது. ஆனால் அதைக் காதல் என்றும் கூறுவதற்கில்லை. ஏதோ போன ஜன்மத்தில் விட்டுப்போன தொடர்பு இப்போது புதுப்பிக்கப்படுவது போல் ஒரு பிரமை. இந்த மாதிரிச் சந்தர்ப்பத்தில் ஒரு பெண் எப்படி நடந்து கொள்வது?''

'''த்சொ, த்சொ த்சொ'' என்று சத்தம் எழுப்பியபடி தலையை அசைத்தார் கோபாலகிருஷ்ணன். ''உனக்காக நான் ரொம்பப் பரிதாபப்படுகிறேன் பவானி!''

''ஏன் ஸார்? எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று நினைக்கிறீர்களா? அதெல்லாம் ஒன்றுமில்லை. பைத்தியம் பிடிக்காமலிருக்க வேண்டும் என்பதற்காகத்தான் உங்களிடம் வந்து சற்று நேரம் பேசினேன். பெரிய கிரிமினல் லாயர் என்று பெயரெடுத்தவர் ஆயிற்றே. எனக்குத் தெளிவு பிறக்கிற மாதிரி ஏதாவது சொல்வீர்கள் என்று எதிர்பார்த்தேன். கடைசியில் பார்த்தால் உங்கள் மூளையையும் குழப்பியதுதான் மிச்சம் என்று தோன்றுகிறது.''

''உன்னை என் மகள் போல் நினைத்துக் கொள்ளச் சொன்னாய். சரி என்றேன். வார்த்தை மீற மாட்டேன். ஆனால் உனக்கு என்னைத் தகப்பனாக ஏற்கும் மனப் பக்குவம் இன்னும் வரவில்லை. அதனால்தான் குறிப்பிட்டுக் கூறாமல் சூயுக்தியாகப் பேசுகிறாய். உனக்கு எப்போது மனம் விட்டுப் பேசத் தோன்றுகிறதோ சொல்லு. கேட்கிறேன். என்னால் முடிந்த யோசனைகளைக் கூறி உதவிகளையும் செய்கிறேன். இதற்கு அதிகமாக நான் என்ன சொல்ல முடியும்?''

''அது போதும் ஸார் எனக்கு'' என்ற பவானி எழுந்து விடைபெற்றுக்கொண்டாள். அவள் நன்றி கூறவில்லை. ஆனால் கலங்கி நீர் ததும்ப நின்ற கண்களை அவரிடமிருந்து மறைத்துக்கொள்ள அவள் பிரயாசைப் படாததே நன்றியை உணர்த்தியது.

பவானி சென்றதும் செல்லம்மாள் மறுபடியும் தன் கணவன் அறைக்குள் நுழைந்து, ''என்னங்க, யாரோ ஒருத்தி வந்திருந்தாளே அவள் பெண்தானே?'' என்றாள்.

''ஏன், அதிலே உனக்கு என்ன சந்தேகம்?''

''அந்தப் போடு போட்டாளே! பெண் என்றால் இப்படியா இருப்பார்கள்?''

''பின்னே எப்படி இருப்பாள்? அவளுக்கு என்ன குறை? அழகாய், இலட்சணமாய் நாகரிகமாய் இருக்கிறாள். படித்து பி. ஏ. பி. எல். பட்டமும் வாங்கியிருக்கிறாள். எல்லோரும் உன்னைப்போல் கர்நாடகமாக இருக்கணுமா என்ன?''

''சரியாய்ப் போச்சு; நீங்க பேசறதைப் பார்த்தால் இந்த வீட்டிலேயே அவளைத் தங்கவைத்து விடுவீர்கள் போலிருக்கிறதே!''

''ஏன், அப்படிச் செய்தால் என்ன? அவள் கூட 'என்னை உங்கள் பெண்ணாகப் பாவித்துக் கொள்ளுங்கள்' என்றுதான் சொன்னாள். மருமகப் பெண்ணாகக்கூட ஏற்கலாம். ஆனால்...''

''போதும், வேறே வினையே வேண்டாம். ஏற்கனவே இந்த வீட்டில் நீங்க அப்பா பிள்ளை இரண்டு பேர் வக்கீல்-வேலை பார்த்து என்னைப் பேச விடாமல் அடிக்கிறீங்க. மருமகளும் வக்கீலாக வந்து விட்டால் நான் ஊமையாகி விடவேண்டியதுதான்.''

''அப்படி நடந்தால் தேவலாமே. ஆனால் என் கவலை வேறு. ஏற்கனவே அவள் இந்த ஊருக்கு வந்த பிறகு அநேகமாக எல்லாக் கட்சிக்காரங்களும் அவகிட்டதான் போறாங்க. இந்த வீட்டுக்கே அவள் வந்து குடியேறி வாசலிலே என் போர்டுக்குப் பக்கத்திலே தன் பெயரையும் எழுதித் தொங்க விட்டால் இப்போ எனக்கு வந்துகொண்டிருக்கிற ஒன்றிரண்டு கேஸ்களும் அவகிட்டத்தான் போகும்'' என்று கூறி நோமினல் கோபாலகிருஷ்ணன் இடி இடியென்று சிரித்தார்.

''என்ன சிரிப்பு? எனக்குப் பிடிக்கவேயில்லை!'' என்று தோளில் முகவாயை இடித்துக்கொண்டு உள்ளே போனாள் செல்லம்.

(தொடரும்)

---



## கையில் வந்தது இறால்!

சமீபத்தில் எங்கள் வீட்டுக்குச் சில விருந்தினர் வந்திருந்தனர். அவர்களுக்கு உணவு இடும்போது அவர்களுடன் கூட என் நாலு வயது மகன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். திடீரென என்னைக் கூப்பிட்டு அவன், ''அம்மா! பாயசத்தில் தலை முடி இருக்கிறது'' என்று கத்தினான். எனக்கு ஒரே அவமானமாகப் போய்விட்டது. இருந்தாலும் விருந்தினர்கள் முன் சமாளிப்பதற்காக, ''கண்ணு! அது தலை முடி இல்லே. சாப்பிடும் தட்டில் உள்ள இறால்'' என்று கூறினேன். அவனும் சமாதானம் அடைந்தவன் போல் சாப்பிடத் தொடங்கினான். 'அப்பாடா!' என்று நிம்மதியோடு பெருமூச்சுவிட்ட என்னைக் கலக்கியது அவனுடைய அடுத்த அலறல்: 'அம்மா! தட்டிலுள்ள இறால் கையில் வந்துவிட்டது.'' நல்ல வேளை, யாராலும் சிரிப்பை அடக்க முடியவில்லை ! - ஸ்ரீமதி மூர்த்தி

# தேனாய் இனிக்கும் தெய்வத்தின் குரல்!

"நடராஜர் தாண்டவம் பொங்குகிற ஆனந்தம். பொங்கினால் அடங்கத்தானே வேண்டும்? அடங்கின பிறகு பொங்குவதுஎன்ப தில்லை. நடராஜாவின் பொங்குகிற ஆனந்தம் அடங்கலாம். நரசிம்ம சுவாமியின் பொங்கு கிற கோபம் அடங்கலாம். தக்ஷிணாமூர்த்தி யின் சாந்தம் அடங்கிய சாந்தம். அவர் ஆனந்தம் அடங்கின ஆனந்தம். அதற்கு மேல் ஒன்றுமில்லை. எல்லாம் முடிகிற இடம் தான் சாந்தம் என்பது. அடங்குகிற இடம் சாந்தம். அந்த எல்லையில்லாத சாந்த மயமான உருவத்தைத் தரிசனம் செய்தா லும் போதும். எத்தனை பொங்குகிற உள்ள மாகஇருந்தாலும் சாந்தமாக அடங்கிவிடும்."

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச் சாரியாரின் அருள் விளக்கம் இது. அவருக்கு தட்சிணாமூர்த்தியிடம் அத்தனை ஈடுபாடு. ஏன் அவரே சாந்த சொரூபம்தானே?

எனவேதான் வானதி பதிப்பகத்தின் உரிமையாளர் திருநாவுக்கரசு, காஞ்சிப் பெரியவரின் அருள்வாக்குகளைப் புத்தக மாகப் பிரகரித்தபோது பின்புற அட்டையில் தட்சிணாமூர்த்தியின் உருவத்தைக் கொடுத்தார். முன்புறம் ஆசாரியாளின் புகைப்படத்தையே காண்கிறோம். ஓவியர் வினுவின் இந்தக் கைவண்ணத்துடன் கூடிய புத்தகத்தின் இரு பிரதிகளுடன் பெரியவா ளிடம் ஆசி பெறச் சென்றிருந்தார் திருநாவுக் கரசு. காஞ்சி முனிவர் அந்தப்பிரதிகளை வாங் கிக் கொண்டார். சட்டென்று முன் பக்க அட்டையைத் திருப்பிப் பின் பக்க அட்டையில் உள்ள தட்சிணாமூர்த்தியின் திருவுருவத்தில் பலநிமிடங்கள் லயித்துத் தம் பார்வையை அதிலேயே நிறுத்தினார். பிறகு முன்னு இருந்த தட்டிலிருந்து இரண்டு பழங் களை எடுத்துக் கொடுத்துத் திருநாவுக் கரசை ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்!



பிரகாசகர்த்தர் வானதி திருநாவுக்கரசும், முதல் பிரதி பெற்ற ஸ்ரீ சாம்பமூர்த்தி சாஸ்திரிகளும்.




ஆசாரிய சுவாமியின் அருள்வாக்கைப் படிப் பதற்கென்றே கல்கியை வாங்குவோர் ஏராள மானவர்கள் உண்டு. அவற்றைச் சிரத்தை யுடனும் பயபக்தியுடனும் ஆற்றலுடனும் தொகுத்தளிக்கும் திரு ரா. கணபதி, பதி னொரு பிரிவுகளில் தொள்ளாயிரம் பக்கங்கள் கொண்ட இப்புத்தகத்தை உருவாக்கவும் தமது அனுபவத் துணையைப் பதிப்பகத்தா ருக்கு அளித்திருக்கிறார். அதன் விளைவு தான் 'தெய்வத்தின் குரல்' புத்தகம்.

புத்தகம் தயாரிக்கப் பிள்ளையார் சுழி போட்டதிலிருந்து அது அச்சாகித் தயாராகி வெளியீட்டு விழா நடக்கும்வரை அவ்வப் போது யோசனைகளையும் ஆசியையும் வழங்கி வந்தார், புதுப் பெரியவர் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

முன்னாள் நீதிபதியும் சிறந்த ஆஸ்திகரு மான திரு என். கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில் சென்னை ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் இந்நூலின் வெளியீட்டு விழா நடைபெற்றது. பிரதம நீதிபதி திரு பி.எஸ். கைலாசம், முதல் பிரதியை, காஞ்சிப் பெரியவரின் பூர்வாசிரம சகோதரர் திரு சாம்பமூர்த்தி சாஸ்திரிகளுக்கு வழங்கினார்.

திரு சாம்பமூர்த்தி சாஸ்திரிகள் நாற்பது ஆண்டு காலம், காஞ்சி காமகோடி பீட ... வாகத்தில் சேவை செய்துவிட்டு ஓய்வு பெற்றவர். அவர்தான் முதல் பிரதியைப் பெற வேண்டும் என்று விரும்பியவர், ஸ்ரீ

ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள். 1932 லிருந்து 1972 வரையிலான நாற்பதாண்டு கால இடைவெளியில் பேசப்பட்ட விஷயங்களைத் தாங்கி வரும் இந்த நூலை, நாற்பதாண்டு காலம் மடத்துடன் தொடர்பு கொண்டவர் வாங்குவது பொருத்தம் என்று அவர் நினைத்திருக்கலாம்.

முதல் பிரதியை வழங்கும்போது, நல்ல அறிகுறியாக ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமி கோவில் யானையைக் கொண்டுவந்து நிறுத்திப் பிளிற வைத்தார் திருநாவுக்கரசு. அந்த யானையும் பேச்சாளர்களின் சௌகரியங்களுக்கு ஈடு கொடுத்துக் காத்திருந்து தருந்த நேரத்தில் தன் குரலை உயர்த்தியது.

ஆச்சாரிய ஸ்வாமிகளின் அன்பு மொழிகளில் அருள் கனிகிறது. புராணங்களையோ இதிகாசங்களையோ வேதங்களையோ தர்ம சாஸ்திரங்களையோ அனைவராலும் முழுதும் படிக்க முடியாது. பெரியவர்கள் அவற்றையெல்லாம் முழுதும் படித்து நமக்குச் சாறு பிழிந்து தருவது போல் இந்த நூலில் தந்துள்ளார்கள். அத்தனையும் அருட்கனிச் சாறுகள்.

எளிய பேச்சு மொழியில் பாமரரும் புரிந்து ரசித்துக் கொள்ளும் வண்ணம், ஆச்சாரிய ஸ்வாமிகள் பேசியதை இந்தப் புத்தகத்தில் காண்பதால் பெரியவாளின் குரல் நம் செவிகளில் ஒலிப்பது போலவே ஒரு பிரமை ஏற்படுகிறது. ஆகவே இந்த நூலுக்குத் 'தெய்வத்தின் குரல்' என்று பெயர் வைத்தது மிகப் பொருத்தம்.

வெளியீட்டு விழாவில் கலந்து கொண்ட பிரமுகர்கள் அனைவருமே சுச்சிதமாகப் பேசி விழாவைப் பரிமளிக்கச் செய்தார்கள்.

ஆர்வத்துடனும், பக்தியுடனும், விழா மண்டபத்திலேயே நூற்றுக் கணக்கான ஆஸ்திக அன்பர்கள் இந்த இருபத்தி ஐந்து ரூபாய் விலையுள்ள நூலை வாங்கிக் கொண்டு போனது கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

வானதி திருநாவுக்கரசுக்கு 1972க்குப் பிறகு ஆசாரிய சுவாமிகள் அருளிய வாக்குகளையும் தொகுத்து இரண்டாம் பாகமாகக் கொண்டுவர இப்போதே துடிப்பு! கணபதியின் துணை இருக்கும்போது அவர் ஏன் கவலைப்பட வேண்டும்!

நான் இரண்டு கணபதிகளையுமேதான் குறிப்பிடுகிறேன்!

பார்த்துக் கேட்டு எழுதியவர்:
**கோமதி ஸ்வாமிநாதன்**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் கலந்து கொள்ளும் ஆர்வம் ஆண்டுக்கு ஆண்டு பெருகி வருகிறது. இந்த வருஷம் முன்னெப்போதையும்விட அதிக அளவில் இளம் எழுத்தாளர்களும் அறிமுக எழுத்தாளர்களும் அனுபவ எழுத்தாளர்களும் கலந்து கொண்டு சிறப்பிப்பார்கள் என நம்புகிறோம்.

**சரித்திர அல்லது சமுதாய நோக்குடன் விஞ்ஞான அல்லது புதுமைக் கருத்துக்களும் கதைகளில் இடம் பெறட்டும். பழைய பாணியுடன் நவயுக நடையும் துள்ளி வரட்டும்.**

| | | | |
|---|---|---|---|
| **முதல் பரிசு** | ... | **ரூ.** | **1,000** |
| **இரண்டாம் பரிசு** | ... | **ரூ.** | **500** |
| **மூன்றாம் பரிசு இரு கதைகளுக்கு தலா ரூ. 250 விதம்** | ... | **ரூ** | **500** |

பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 100 சன்மானம் வழங்குகிறோம்.

**முடிவு தேதி: 30-6-76**

சிறுகதைகள் கல்கியில் நாலு அல்லது ஐந்து பக்கங்களுக்கு மேற்படாமல் அமைவது நலம். பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் ஒட்டப்பெற்ற சுயவிலாசமிட்ட உறை அனுப்புதல் வேண்டும். போட்டியில் பங்கு பெறுவோர் தங்களைப் பற்றிய சிறு குறிப்பும் புகைப்படமும் அனுப்பலாம். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 031**

கண்மணிப் பாப்பாவுக்கு மிகச் சிறந்ததென
நீங்கள் கண்டுகொண்ட பவுடர்...




# உங்களுக்கும் மிகச் சிறந்ததே







ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். உங்கள் அருமையறிந்து உருவாக்கிய அருமையான செல்வம்.
வேறெந்தப் பவுடரிலும் நீங்கள் அனுபவித்தறியாத சொகுசான இன்பம். மலர் மாரி பொழிந்து உடலைத்
தழுவும் மென்மை—உலகில் உன்னதமான இயற்கை நறுமணமேந்தி வரும் மென்மை.

இளந்தளிர் மேனிக்கென்றே ஈடிலாத் தூய்மையும் மென்மையுமே உருவான படைப்பு!
ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். அதனால்தான் 75 ஆண்டுகளாகப் பாப்பா உலகின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக
விளங்குகிறது. அதனால் தான் உங்களுக்கும் இதுவே உகந்த பவுடர்.

# ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

அருமைப் பாப்பாக்களின் ஆசை இதுவே:
நீங்களும் உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்

''**நா**ன் அப்பவே முட்டிண்டேன். கேட்டேளா ? நீங்க அவளை வேலைக்குப் போகவே விட்டிருக்கக் கூடாது. அதனால் வந்ததுதான் எல்லாம்.''

தந்தை வாய் திறக்கவில்லை. அவர் உள்ளத்திலும் குழப்பம், திகைப்பு. ஆனால் அவற்றுக்கு இத்தனை எளிதாகவும் திட்டவட்டமாகவும் காரணம் சொல்லிவிட அவரால் முடியவில்லை.

''வேலைக்குப் போய்ச் சம்பாதிக்கிறோம்கிற துணிச்சல்தானே இப்படியெல்லாம் செய்ய வைக்கிறது ?''

''எப்படியெல்லாம் செய்ய வைக்கிறது? இப்போ என்ன பெரிசா நடக்கக் கூடாதது நடந்துடுத்து ?''

''முந்தியெல்லாம் நம்ம ஹேமா வேத்து ஆம்புளைகளை நிமிர்ந்துகூடப் பார்த்திருப்பாளா? இப்போ இப்படி நெருக்கமாப் பழகற துணிச்சல் எங்கேயிருந்து வந்தது ?''

மீண்டும் தந்தை யோசனையில் ஆழ்ந்தார். வேலை பார்த்துச் சம்பாதிக்கும் பெண்கள்...., அவர்களுக்கு வருவது துணிச்சல் அல்ல, தைரியம் ; தன்னம்பிக்கை. தம் வலிமையைப் புரிந்துகொள்ளும் புதிய விழிப்பு. அதன் காரணமாய், தம் உணர்ச்சிகளை இயல்பாக ஏற்றுக் கொள்ள முடிகிற மனத்திண்மை. அதெல்லாம் தான்தோன்றித்தனமல்ல. அதுவல்ல இப்போது பிரச்னை. ஹேமாவின் வடிவத்துக்கு இப்படியும் ஒரு கோணம் இருக்கிறதென்பதுதான்.

''எந்தக் கோட்டையைப் பிடிக்கப் பலமா யோசனை ? இனிமே அவளை வேலைக்குப் போக வேணும்னு கண்டிப்பாய்ச் சொல்லிடுங்கோ, என்ன ?''

''இன்னொருத்தர் விஷயத்தில் எப்படித் தலையிடறது ?''

'' ரொம்ப அழகாய்த்தான் இருக்கு. இன்னொருத்தராவது ! சொந்தப் பெண். இதையெல்லாம் முளையிலேயே தடுத்துடறதுதான் விவேகம். நகத்தால் கிள்ளி எறிய வேண்டியதைக் கோடாலியால் வெட்டற மாதிரி செஞ்சுக்க வேணும். ஏதோ பராபரியாய்க் காதில் விழுந்துது. நாம் விழிப்பாயிடணும். துளி சபலப்பட்டிருப்பாள் போலிருக்கு. அது பெரிசா வளர்றதுக்குள் நிறுத்திட்டால் எல்லாருக்கும் நல்லது. அவ்வளவுதான் நான் சொல்லலாம்.''

அதன் பிறகு கணவன் மனைவியரிடையே விவாதம் தொடரவில்லை. 'எல்லாம் சரியாக இல்லை, இது எனக்குப் பிடிக்கவில்லை' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தது அவர்கள் மௌனம். அவர்களது இளைய மகளும் அவளுக்கும் இளைய இரு பிள்ளைகளும் முகத்தில் ஒரு கவலையான சுவாரசியத்துடன் வீட்டில் குறுக்கும் நெடுக்கும் போய்க்கொண்டிருந்தார்கள்.

இருட்டத் தொடங்கும் நேரத்தில் வாசலில் செருப்புச் சத்தம் கேட்டது. ஹேமா வந்தாள். முன் அறையில் முதலில் தென்பட்ட தந்தையைப் பார்த்துப் புன்னகை செய்தாள். சற்று நேரம் உள்ளே போய்விட்டு சரப் பாதங்கள் தரையில் அடி பதிக்க வேறு புடவையில் மீண்டும் வந்து, ''ஸ்ஸ்...'' என்றவாறு ஒரு நாற்காலியில் உட்கார்ந்தாள்.

அறையில் நிசப்தம். உள்ளே எட்டிப் பார்த்த தங்கை அப்பாவையும் அக்காவையும் மாறி மாறிப் பார்த்தாள். அப்பா ஏன் எதுவுமே பேசவில்லை ?

தாயார் அங்கு ஏதோ பேச்சுக்கள் நேர்ந்து கொண்டிருக்க வேண்டும் என்ற ஊகத்தில் கையில் காப்பித் தம்ளருடன் வந்தாள். கணவனின் மௌனம் அவளுக்கும் வியப்பளித்திருக்க வேண்டும். அவரைப் பார்த்துப் புருவத்தை உயர்த்தியவாறே காப்பித் தம்ளரை மகள் அருகில் வைத்தாள்.



''நீ ஏம்மா காப்பியை எடுத்துண்டு வந்தே? நான்தானே எப்பவும் உள்ளே வந்து கலந்து சாப்பிடுவேன்? ரொம்ப சூடாயிருக்கவே கொஞ்சம் ஆறட்டுமேன்னு இங்கே வந்தேன். இது என்ன புது வழக்கம்?'' என்றாள் ஹேமா.

''இந்நாத்தில் எத்தனையோ புது வழக்கம் வரல்லையா? அதிலே இது ஒண்ணு'' என்று அவள் தாய் அவளை விழித்துப் பார்த்தாள்.

ஹேமாவின் முக மலர்ச்சி மறைந்தது. கேள்விக்குறியோடு தாயை ஏறிட்டு நோக்கினாள். தந்தை துணுக்குற்றாற் போல் அவர்கள் பக்கம் பார்வையைச் செலுத்தினார். தங்கை கிளுகிளுத்தாள். பிறகு கண்களை உருட்டிக் குரலை நாடக வில்லன் பாணியில் அட்டகாசமாக்கி அக்காவைப் பார்த்து நீட்டி முழக்கி மிகையான தோரணையில், ''எவனோடேடீ சுத்திட்டு வரே? ஹா ஹா ஹா!'' என்று வேடிக்கை செய்வது போல் சொல்லி விட்டு அங்கிருந்து மறைந்தாள்.

ஹேமா சட்டென்று நிமிர்ந்தாள். தங்கை போன திசையை வியப்புடன் வெறுத்த மறு கணம், அவள் எதற்கோ அடி யெடுத்துக் கொடுத்திருக்கிறாள் என்பது புரிந்தது. அது புரிந்ததால் அது என்னவாக இருக்கும் என்பதற்கும் ஜாடை புரிந்தது. உதடுகள் இறுகத் தாயின் முகத்தையும் பிறகு தந்தையின் முகத்தையும் சூழ்ந்து நோக்கி, ''என்ன சொல்றா அவ?'' என்றாள்.

''அது சொல்லித்தான் தெரியணுமோ, உனக்கு?'' என்ற தாயைத் தடுத்துத் தந்தை, ''சரி, சரி! இதெல்லாம் என்ன இப்போ! எல்லாம் அப்புறமாய்ப் பேசிக்கலாம், விடு'' என்றார்.

''எப்புறமாய்ப் பேசிக்கிறது? இப்படிக் கேட்கத் தைரியமில்லாம தள்ளிப் போட்டுண்டிருந்தேன்னா காரியம் கை மீறிப் போயிடும்.''

''எந்தக் காரியம்?'' என்றாள் ஹேமா.

''எல்லாம் உன்.....''

தந்தை மீண்டும் குறுக்கிட்டார். ''ஒண்ணுமில்லே.... ஹேமா. உங்கம்மா ஏதோ கவலைப்படறா.... நான் உன்கிட்டே அப்புறம் கொஞ்சம் நிதானமாய்ப் பேசணும்.''

''விஷயத்தைச் சொல்லுங்கோப்பா.''

''அதை நாங்கள் வாய் கூசாமல் சொல்லணுமாடி? ஊரெல்லாம்தான் சந்தி சிரிக்கிறதே? நாங்க கேள்விப்படறது....''

''கேள்விப்படறதெல்லாம் சரியாய்த்தான் இருக்கணுமா என்ன? குழந்தையை அலட்டாதே'' என்றார் தந்தை.

ஹேமா பெற்றோரை நிதானமாய்ப் பார்த்தாள். பிறகு, ''என்னையும் பாஸ்கரன்னு ஒருத்தரையும் இணைச்சு ஏதாணும் கேள்விப்பட்டேளா?'' என்றாள்.

தந்தைகூட அரண்டுவிட்டார். வதந்தி, பராபரி, கேள்விப்படுவது, என்பதெல்லாம் போய் விஷயம் நிஜமென்று மிக மிக உண்மையானதாகிவிட்டது. 'இனி என்னை நீங்கள் ஏறிட்டுப் பார்த்துத்தான் தீரவேண்டும்' என்று தூலப் பொருளாக எதிரே வந்து நின்றுவிட்டது. இந்த அன்னிய முகத்தை எப்படிச் சந்திப்பது?

''ஏண்டி, உனக்கு வெட்கம், மானம் ஒண்ணுமில்லையா?'' என்று கூவினாள் தாய்.

''இந்த... இந்தப் பாஸ்கரன் யாரு?'' என்றார் தந்தை பலவீனமாக. தாய் அவரைக் கோபமாய் முறைத்தாள்.

''எங்க எலெக்ட்ரிக் கம்பெனியோடு வியாபாரம் பண்ண வந்த இன்னொரு கம்பெனியின் பிரதிநிதி. அது சம்பந்தமாய் என் பாஸோடு பேச நாலஞ்சு தரம் வந்தார். டைப்பிஸ்டாய் நானும் அப்பப்போ அந்த அறைக்குப் போக வேண்டி வரும். இப்படித்தான் முதல்லே பார்த்துண்டோம். பரஸ்பரம் முதல் இம்ப்ரெஷன் நல்லவிதமாய் ஏற்பட்டுது....''

''நிறுத்தடி, பாவி! அவன் யார் என்று மட்டும்தானே கேட்டேன். இந்த விவரமெல்லாம் யார் கேட்டது?''

''....அப்புறம் ஒரு தரம் ஆபீஸுக்கு வெளியே சந்திக்க நேர்ந்தது. தெரிஞ்சவர்கள் என்கிற முறையில் நின்னு பேசினோம். அப்படியே பழக்கமாச்சு. அடிக்கடி பார்த்துப்போம், பேசிப்போம். ஒருத்தர்கிட்டே ஒருத்தருக்கு மதிப்பு ஏற்பட்டுது. அப்புறம்....''

''போதும், போதும் ஹேமா! இந்தத் தொடர்ச்சியெல்லாம் வேண்டாம், நிறுத்து. நிறுத்தேன்....!''

ஹேமா நிறுத்தினாள். 'அப்புறம்' என்ற தன் அடுத்த சொல்லாக வாயில் ஓர் இனிய புன்னகை.

''இது என்ன அக்கிரமம்!'' என்று தாய் வெடித்தாள். தந்தை எதுவும் சொல்லவில்லை. ஆனால் அவர் மனம் அந்த வார்த்தைகளை எதிரொலித்தது.

இன்றையக் கதை:

**ஆர். சூடாமணி**

''என்னவோ பாவம் குழந்தை, தனக்குள்ளேயே மறுகி மறுகித் தேய்வானேன், ஒரு மாறுதலாயிருக்கட்டும்னு உங்கப்பா படிக்க வைச்சு வேலைக்கு அனுப்பினால் இப்படியா சேற்றில் விழறது?''

''நான் எந்தச் சேற்றிலேயும் விழலே. ஏதாணும் உளறாதேம்மா.''

''வாழ்க்கை முடிஞ்சு போனப்புறம் இப்படிச் சபலப்....''

''என் வாழ்க்கை எங்கேம்மா முடிஞ்சு போச்சு? நான் இன்னும் உயிரோடுதானே இருக்கேன்? உயிர் முடிஞ்சு போறபோது தான் வாழ்க்கையும் முடிஞ்சு போகும்.''

''அப்போ நீ என்னதாண்டி நினைச்சுண்டிருக்கே, மனசிலே? கெட்டு அலையறதுன்னா?''

''ஏன் கெட்டு அலையணும்? கல்யாணம் பண்ணிக்கக் கூடாதா?''

பெற்றோர் இருவரும் அதிர்ச்சியுற்றார்கள். தந்தை தம் உணர்ச்சியை எண்ணித் தாமே வியந்தார். இதில் அதிர்ச்சியடைய என்ன இருக்கிறது? உலகம் முழுதும் — ஏன், நம் நாட்டிலேயே சகஜமாகிக் கொண்டு வரும் விஷயம்தான். போன மாதம் சண்டிகரிலிருந்து வந்திருந்த அவருடைய அத்தான் ஒருவர் வட இந்தியாவில் இப்போதெல்லாம் இது பிரச்னையே இல்லை என்றுகூடச் சொன்

ளூர். அப்போது தமக்கு ஏதும் அதிர்ச்சி ஏற்படவில்லையே! காற்று அருகில் அடிக்கும் போதுதான் மூச்சுத் திணறுகிறது.

''இது ஒன்றும் தவறே இல்லையே, சகஜம்தானே! பின் ஏன் என்னுள் உடனுக்குடன் இந்த எதிர் விளைவு? இது நான் உணர்வதில்லையா? என் எண்ணப் பயிற்சி, என் ஆண் தன்மை, எனக்குப் பின்னே குவிந்திருக்கும் நூற்றாண்டுகள்....'

இருவரும் இன்னும் மகளை வெறித்துக் கொண்டேயிருந்தார்கள். மகளின் நெற்றியையும் கழுத்தையும் வெறித்தார்கள்.

ஹேமாவின் முகம் வாடியது. ''நீங்க ரெண்டு பேரும் என் அப்பா அம்மாதானா? என் சந்தோஷத்துக்கு இவ்வளவு வரவேற்புதானா இந்த வீட்டிலே?''

'எனக்குப் பின்னே குவிந்திருக்கும் நூற்றாண்டுகள்.... நான் வெறும் நானாக இயங்க முடியாதா? காலச் சிறையைத் தகர்க்க முடியாதா? என் மகளாய் மட்டும் எப்படி முடிகிறது? அவள் சிந்தனை எப்படி அவளாக மட்டுமே சுதந்திரமாய் எழும்பி நிற்க முடிகிறது? அதே போல், நான் அறியாத யாரோ ஒரு பாஸ்கரனின் சிந்தனையும். இவ்விருவரும் என்னைவிடப் பெரியவர்கள்.'

தாய்தான் கடைசியில் பேசினாள். ''நீ நாளையிலிருந்து வேலைக்குப் போக வேணாம். பேசாம கிருஷ்ணா ராமான்னு வீட்டோட கிட. மனசை அடக்க முடியலேன்னா தினம் கோயிலுக்குப் போய்ச் சுவாமி தரிசனம் பண்ணிட்டு வா.''

''கோவில்லேகூட சுவாமியும் அம்பாளுமாய்த்தான் இருக்காம்மா'' என்று கூறிக் கண்களைத் திருப்பிய ஹேமாவின் எதிரே, அறையின் உள் பக்கக் கதவினிடையே வந்து நின்றிருந்த தங்கையின் முகம் தெரிந்தது.

கல்லூரி மாணவியான அந்தத் தங்கை அவளைப் பார்த்து, ''உனக்கு லவ்வா? யு ஆர் ஷேம் லெஸ்!'' என்று கூவிவிட்டு மறுபடியும் உள்ளே மறைந்தாள்.

ஹேமா திகைத்து நின்றாள்.

''அவள் சொன்னதைக் கேட்டியாடி....? அதிலே என்ன தப்பு? அதுவும் நீ இந்த மாதிரி பண்ணினால் அப்புறம் அவளுக்கு எப்படிக் கல்யாணம் ஆகும்? உன் ரெண்டு தம்பிகளுக்கும் நாளைக்கு யார் பெண் கொடுப்பா? அதையெல்லாம் யோசிச்சியா?'' தாய் குரலை இளக்கிக் கொண்டாள். ஹேமாவைத் தொட்டுத் தலையை வருடினாள். ''போகட்டும்மா ஹேமா. இதையெல்லாம் கெட்ட சொப்பனமாய் நினைச்சு மறந்துடு. மனசை அடக்காதவள் ஒரு பொம்மனாட்டியா? நீ நிஜத்தில் நல்ல பெண்ணுன்னு எனக்குத் தெரியும்....''

''இனிமேல் நடக்க வேண்டிய கல்யாணங்களுக்காக இப்போ நடக்கற கல்யாணத்தை வேணாம்னு ஒதுக்கறியா அம்மா? அவாள்ளாம்தான் உன் குழந்தைகளா? நானும் உன் குழந்தை இல்லையா?''

''இது ஒரு கல்யாணமாடி?'' தாய் தன் தலையில் அறைந்து கொண்டாள். ''நான் அவலத்த பாவத்தைப் பண்ணியிருக்கணும். நம்ம குலமென்ன, கோத்திரமென்ன? நீ இந்தக் கல்யாணத்தைப் பண்ணிக்கவே கூடாது ஹேமா, கண்டிப்பாய்ச் சொல்றேன்.''

ஹேமா தந்தையின் பக்கம் திரும்பினாள். ''அப்பா, உங்க அபிப்பிராயமும் இதுதானா?''

தந்தை பேசவில்லை.

''உங்கப்பாவுக்கு மட்டும் பிடிக்குமாடி? அவர் மானம்தானே முதல்லே போகும்? இன்னார் பெண் இப்படிச் செஞ்சாள்னுதானே உலகம் சொல்லும்?''- தாய் சிறிது நம்பிக்கை கொண்டாள். ''ஹேமாக் கண்ணு, நான் சொல்றதைக் கேளுடி குழந்தை. நான் உனக்குக் கெடுதலைச் சொல்வேனா? இப்போ என்னமோ பெரிய புரட்சி செய்யறாப் போலத்தான் தோணும். நாளைக்கே ஊரில் காறித் துப்பச்சே நாக்கைப் பிடுங்கிக்கலாம் போல் இருக்கும். அந்தப் பையனே உன்னை மதிக்க மாட்டான். இந்த வம்பெல்லாம் எதுக்கு? என்னமோ உன் தலையெழுத்து, சின்ன வயசிலேயே இப்படி ஆயிடுத்து...... தெய்வசித்தம் அப்படின்னு நாம் என்ன செய்யலாம்? நீ இனிமேல் வேலை பார்க்க வேணாம். நீ சம்பாதிச்சு இந்தக் குடும்பம் சாப்பிடணும்னு போறே? மனசை மறக்கறதுக்கும் பொழுதுபோறதுக்கும்தானே உன்னை வேலைக்கு அனுப்பிச்சது? பேசாம....''

''ஆனால் நான் விரும்பற வாழ்வை வாழறதுக்கு வேண்டிய சுதந்திரத்தை இப்போ இந்த வேலை எனக்குக் கொடுத்துடுத்தும்மா. அப்பா, நான் கேட்டதுக்குத் தயவுசெஞ்சு பதில் சொல்லுங்கோ. உங்க அபிப்பிராயமும் இதுதானா?''

தந்தை தவிப்புடன் நிமிர்ந்தார். அதற்குள் தாயின் குரல் குறுக்கே பாய்ந்தது.

''அவள் சொன்னதைக் கேட்டேளா? நாம் தடுத்தாலும் தன் விருப்பப்படிதான் செய்வாளாம். தங்கை தம்பிகள் எக்கேடு கெட்டாலும் பரவாயில்லைங்கிறா. இத்தனை சுயநலமா! நான் வாங்கிண்டு வந்த வரம் இப்படியா இருக்கணும்? நம்ம குலத்தில் இல்லாம குடும்பத்தில் இல்லாம இப்படியா பழி பாவத்துக்கு அஞ்சாத ஒரு பெண்.... இதுக்கா படிக்க வைச்சது? இதுக்கா வேலைக்கு அனுப்பினது? ஐயோ, ஈசுவரா!''

''அம்மா!'' ஹேமா தாயைப் பார்த்து நிதானமாய்ப் பேசினாள். ''அந்த நாளில் என்னைப் போலப் பெண்களை முதல்லே உடன் கட்டை ஏற வச்சா. துடிக்கத் துடிக்க உயிரோடு நெருப்பிலே தள்ளினா. அப்புறம் அது கொடுமைன்னு புரிஞ்சு அந்த வழக்கம் நின்னுது. அதுக்கப்புறம் அந்தப் பெண்களை வீட்டோடு அடைச்சு வச்சா. அலங்கோலம் பண்ணி உடம்பை வருத்திக்க வச்சா. பிறகு அதுவும் கொடுமைன்னு புரிஞ்சு அந்த வழக்கமும் நின்னுது. தலை மயிரை எடுக்கறது, பட்டினி கிடக்கறது, வீட்டோட முடங்கிக் கிடக்கறது, பிற ஆம்புளைகளோடு பேசாம இருக்கறது, அதெல்லாம் மாறித்து. காலக் கிரமத்தில் அந்தப் பெண்கள் படிக்கலாம்னு ஏற்பட்டுது. வேலைக்குப் போகலாம்னு ஏற்பட்டுது. நீ சொன்ன மாதிரி, அதுவே அவர்கள் மனசுக்கு ஒரு மாறுதல்னும் தேவையானதுன்னும்கூட ஏத்துக்கப் பட்டது.

---

**காரிஸ்டுகள்**

மாஸ்கோவில் கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசிகள் 75 ஆயிரம் டாலர் மதிப்புள்ள பெரிய கார்கள் வைத்திருக்கிறார்களாம்.

டைம் —பாலி

# பிரதி கோப்பையிலும் 100% சுத்தமான காப்பியை அள்ளித்தரும் இன்ஸ்டன்ட் காப்பி

# இதுதான்.




ஏன் தெரியுமா?

## நெஸ்கஃபே



NESTLÉ



**மோதிரம் பேசுகிறது!**

**கோபம் (கறுப்பு) கவலே (சிவப்பு) சந்தோஷம் (இளம் பச்சை) ஆசை (வயலட்) இப்படி உங்கள் மனநிலேக்கு ஏற்ப நிறம் மாறும் கல் பதித்த மோதிரங்கள் இப்போது அமெரிக்காவில் தயாராகின்றன.**

இல்லஸ்டிரேடட் வீக்லி — பாபு

---

இப்போ அவா இயல்பாய் உடுத்திக்கிறு. பல விஷயங்கள் படிக்கிறு. வெளியே போற போது நாலு பேரோட பழகறு. ஆண் பெண் பேதமில்லாத சமூகம்தான் இப்போ அவா சமூகமும். இப்படியெல்லாம் படிப்படியா அவர்களே இயற்கையானவர்களாய் ஆக்கிண்டே வரபோது 'வாழ்க'வான கடைசி மாற்றம் எதும்மா? அவர்கள் விருப்பப்பட்டால் மறுபடியும் கல்யாணம் பண்ணிக்கலாம்கிற சுதந்திரம்தானே ? அந்தக் கட்டத்தில் நீ இடீர்னு முனேக்கக் காலத்தைப் பின்னுக்குத் தள்ளிப் போடணும்னு முடியுமா ?''

தந்தை பெருமிதத்துடன் அவளேப் பார்த்தார். 'சரியாய்ச் சொன்னுய்' என்று கூற வாய் துடித்தது. ஆனல் வார்த்தை எழவில்லே.

''பாவிப் பொண்ணே, பாவிப் பொண்ணே! இவ பேசறதைக் கேட்டேளா? இப்படியா ஒரு மகாபாவி வந்து பிறப்பா என் வயித்திலே?'' தாய் அழ ஆரம்பித்தாள்... அழுகையினூடே சொன்னுள்: ''அடியே, நீ செத்திருந்தால் கூட இதைவிடப் பரவாயில்லேயடீ !''

சூடு பட்டாற்போல் கூசி ஹேமா தாயை ஒரு கணம் உற்றுப் பார்த்தாள். பிறகு, ''தாங்க்யூ அம்மா!'' என்று தந்தையின் பக்கம் திரும்பினுள். ''அப்பா, கடைசியாக் கேக்கறேன், உங்க அபிப்பிராயமும் இதுதானு ?''

''ஹேமா....!'' தந்தை மென்று விழுங்கினுர். ''நீ சொல்றது எனக்குப் புரியறது... ஆனு உங்கம்மா சொல்றதும் புரியறது...''

ஹேமாவின் கண்களில் ஓர் ஒளி அணேந்தது. தந்தையைப் பறி கொடுத்துவிட்ட இருள் அது என்று புரிந்து தந்தை துடித்தார். எனினும் அவர் வாய் திறக்கவில்லே.

ஹேமா வேதனே நெஞ்சைக் கவ்வத் தந்தையின் வடிவத்தைச் சிறிது நேரம் வெறித்தாள். அப்பாகூடவா....?

'' இனிமேல் நான் சொல்ல ஒன்னுதான் பாக்கியிருக்கு. என் முடிவு மாறலே'' என்ருள் அவள். தாயின் ஓலமும் வசைகளும் அதிகரித்தன. தந்தையின் மௌனம் பின்னும் தீவிரமாகியது.

மாற்ற முடியாத முடிவு அவளுடையது என்ற பிறகுகூடவா அவர்கள் மனம் நெகிழவில்லே ? அவள் தனக்குப் பிடித்த ஒன்றைச் செய்யப் போகிருள் என்பதையே ஒருவரும் யோசித்துப் பார்க்கவில்லேயா? அவள் மகிழ்ச்சியில் சேர்ந்து மகிழ அங்கே ஓர் ஆத்மா இல்லேயா ? கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன் என்பவளுக்கு வாழ்த்துக் கூற அங்கே யாருமே இல்லேயா ? அப்பா கூடவா....

அவள் திரும்பினுள். எதிரே இப்போது ஆக்ரோஷப் பார்வையுடன் தங்கை, இரு தம்பிகள். அவர்களிடம் அவள் அமைதியாய்க் கூறினுள் :

''இதோ பாருங்கோ ? நான் செய்யப் போறது தப்பு இல்லே. இதுக்காக உங்களே யாராவது கல்யாணம் பண்ணிக்கமாட்டேன்னு சொன்னுல் அவர்கள் இடைக்காம போறது ஓர் இழப்பு இல்லே. நிஜத்தில் தகுதி உள்ளவர்கள் வரபோது அப்படிச் சொல்லமாட்டா.''

ஹேமா ரூமேயில் மேஜையின் மீதிருந்த டெலிபோன் அருகில் சென்று ஓர் எண்ணே 'டயல்' செய்தாள்.

''ஹலோ... கொஞ்சம் மிஸ்டர் பாஸ்கர.. ஓ, பாஸ்கர்தானே பேசறது ! இது ஹேமா. நம்மைப் பத்தி என் வீட்டில் சொல்லணும்னு நினேச்சுண்டிருந்த போது இன்னிக்குச் சந்தர்ப்பம் வந்து விஷயம் வெளியே வந்துடுத்து. என் அம்மாவுக்குத் துளிக்கூடப் பிடிக்கலே.'' ஹேமா தந்தையின் பக்கம் முகத்தைக் கண நேரம் திருப்பினுள். ''அப்பாவுக்கும் பிடிக்கலே.'' (தந்தை உதட்டைக் கடித்துக் கொண்டு தலே கவிழ்ந்தார்.) ''இந்த எதிர்ப்பையும் உங்க வீட்டில் ஏற்படக்கூடிய எதிர்ப்பையும் மீறிண்டு என்னேக் கல்யாணம் பண்ணிக்கிற தைரியம் உங்களுக்கு இருக்கா?''

ஹேமாவின் வாயில் அந்த இனிய புன்னகை மீண்டும் தோன்றியது. ''நான் அப்படிக் கேட்டிருக்கக் கூடாதுதான், ஸாரி. அப்போ நீங்க ஒரு டாக்ஸி வைச்சுண்டு உடனே வாங்கோ. என் அப்பா அம்மாவுக்கு உங்களே அறிமுகப்படுத்தறேன். அப்புறம் அதே டாக்ஸியில் என் சாமான்களோடு வந்து ஒரு ஹோட்டல்லே ரூம் பார்த்துண்டு இறங்கிக்கறேன். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ நம்ம கல்யாணத்தை முடிச்சுண்டு நாம் தனியா வீடு பார்த்துண்டு போயிடலாம்.... ஒகே.... ஆமாம், எப்படியோ சமாளிச்சுக்கலாம்.''

ரிஸீவரை வைத்துவிட்டுத் தன் மனிதர்களேப் பார்த்தாள். தங்கை ''குட் ரிட்டன்ஸ்'' என்ருள். அவளும் தம்பிகளும் விறைப்புடன் உள்ளே போனுர்கள். தாய் அவளேப் பார்த்து விழித்துவிட்டுத் தொடர்ந்து அழுதாள். தந்தையின் முகம் அலண்டிருந்தது. ஆனல் யாருமே ' நீ வீட்டை விட்டுப் போகாதே' என்று சொல்லவில்லே. ஒரு வேளே 'கெட்ட' பெண்ணே வீட்டைவிட்டு விரட்டிவிட்டோம் என்ருல் மற்றவர்களுக்குக் கல்யாணம் ஆவது சுலபம் என்று நினேக்கிருர்களா ?

ஹேமா தன் காப்பித் தம்ளரைக் கையில் எடுத்தாள்.

பரிவாக ஏதாவது சொல்ல வேண்டும் என்ற தாபத்தில் தந்தை, ''காப்பி.... ஆறிப் போயிருக்குமேம்மா'' என்ருர்.

'' நான் மறுபடியும் சுட வச்சுக்கறேம்ப்பா.''

அவள் உள்ளே போய்விட்டுச் சிறிது நேரத்தில் ஒரு ஸூட்கேஸோடும் தலேயணேயோடும் மறுபடியும் ஹாலுக்குள் வந்தாள். பாஸ்கரன் வருவதற்குக் காத்திருந்தபடி நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

## அத்தியாயம் 10

# சூனியக்காரர்

அதிகாலையில் அரண்மனைக்குத் திரும்பினான் ரவிவர்மன்.

சாதாரணமாக யூஜியானாவின் இல்லத்துக்குச் சென்று அவன் திரும்பும் போது எல்லோரும் விழிப்பதற்கு முன்பாகத் திரும்பி விடுவது வழக்கம்.

இப்போதும் அரண்மனையில் காவலர்களைத் தவிர மற்ற அனைவருமே தூங்கிக் கொண்டிருப்பார்கள் என்று கருதித்தான் அவன் அரண்மனை நோக்கி வந்தான்.

ஆனால் அங்கே தாவளி சகோதரிகள் விழித்துக் கொண்டிருந்தார்கள்.

மற்ற சகோதரிகள் அனைவருக்கும் தான் கண்ட காட்சியைப் பற்றி விவரித்துக் கொண்டிருந்தாள் சாலியூர்த்தாவளி.

அவர்களும் திகைப்போடு அதனைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

சாதாரண காலத்திலேயே சகோதரன் எங்கே சென்றான், எப்போது திரும்பினான் என்று கேட்டுப் பழகியவர்கள் அல்ல அவர்கள்.

இப்போது எப்படிக் கேட்பார்கள்?

பேயறைந்த மாதிரி அவனும் உள்ளே நுழைகிறான்; அவர்களும் அப்படியே இருக்கிறார்கள்.

ஏதோ ஒரு பயங்கரம் நடந்துவிட்ட அரண்மனை போல் அது காட்சியளித்தது.

உள்ளே சென்ற ரவிவர்மன் அந்தப்புரத்துக்குள் எட்டிப் பார்த்தான்.

கட்டிலில் சாய்ந்தபடி பத்மாவதியும் அதே நிலையில் இருந்தாள்.

பொழுது மெதுவாக விடியத் தொடங்கிற்று.

புள்ளினங்களின் ஓசை எழுந்தது.

ஆயர்கள் பசுக்களை ஓட்டிச் செல்லும் ஒலி அவர்கள் காதிலும் விழுந்தது.

இரவு நேரக் காவலர்களை மாற்றி, காலை நேரக் காவலர்கள் வந்து கொண்டிருந்தார்கள்.

பயந்த நிலையிலிருந்து மெதுமெதுவாக ரவிவர்மன் விடுபட்டான்.

பொழுது புலர்ந்ததே தவிர இரவு கண்ட கனவுகளால் அவன் உள்ளம் இருளத் தொடங்கிற்று.

குறித்த நாளில் மகுடாபிஷேகத்தை நடத்தித் திருவது என்று முடிவு கட்டினான்.

நாராயண நம்பூதிரி ஒரு சூனியக்காரர்.

இரவு நடந்த நிகழ்ச்சிகளெல்லாம் அவரது சித்து வேலைகளே என்று முடிவு கட்டினான்.



நேரம் ஆக ஆக அந்த ஆத்திரம் அதிகமாயிற்று.

முன்பு மார்த்தாண்ட வர்மனைக் கொலை செய்ய அவன் கருதியதில்லை.

சிறை செய்யவே நினைத்திருந்தான்.

இப்பொழுதோ பழி வாங்கும் எண்ணம் தலைதூக்கியது.

அதற்காகவே படைவீரர்களை அழைத்தான்.

ஆறேழு பிரிவாக அவர்கள் நாடு முழுவதும் சென்று, மார்த்தாண்ட வர்மனைக் கொண்டு வரவேண்டும்; இல்லையேல் கொன்று வரவேண்டும் என்று கட்டளையிட்டான்.

'நாராயண நம்பூதிரியையே கொலை செய்து விட்டால் என்ன?' என்று அவனுக்குத் தோன்றியது.

ஆனால் அதன் விளைவு பயங்கரமாக இருக்கும் என்பதை அவன் அறிவான்.

கிராமங்கள்தோறும் செல்வாக்குப் பெற்ற நம்பூதிரிகள் கிளர்ச்சி செய்யத் தொடங்கினல் அவர்களிடத்தில் அதிக ஈடுபாடுள்ள சிறியன் கிறிஸ்துவர்களும் சேர்ந்துகொள்ளக் கூடும்.

அப்பொழுதே பொருளாதாரத்தில் அதிக வலுப் பெற்றிருந்த சிறியன் கிறிஸ்துவர்கள் நம்பூதிரிகளுக்கு உதவத் தொடங்கினல் முடிவு எப்படியாகும் என்று சொல்ல முடியாது.

அதனல் அந்த எண்ணத்தைக் கைவிட்டான்.

களை இழந்த அரண்மனையில், பசியிழந்த ரவிவர்மன், பயமிழந்த வெறியனைக் காட்சியளித்தான்.

பத்மாவதி பக்கத்தில் வந்தால் கடிந்துகொண்டான்.

சகோதரிகளிடம் கூட முகம் கொடுத்துப் பேசவில்லை.

அந்த நேரத்தில், பகவதி கோவில் பூசாரி ஓடி வந்து, கோவில் குளத்தில் ராமவர்மன் மாண்டு கிடக்கும் கோரத்தைக் கூறினன்.

மறுபடியும் திடீரென்று பயம் வந்தது ரவிவர்மனுக்கு!

கனவில் கண்டது உண்மையாக இருக்கிறதே!

மறுபடியும் திடீரென்று அவனுக்குக் கோபம் வந்தது நாராயண நம்பூதிரி மீது.

''இதுவும் அவனது சித்து வேலைதான்'' என்று தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டான்.

பாதி பயமும் பாதி சமாதானமும் மாறி மாறி வந்தன.

''பிணத்தைத் தூக்கிச் சுடுகாட்டில் போட்டுவிட்டு, குளத்தைக் கழுவிவிடு'' என்றான்.

''இன்னும் மகுடாபிஷேகத்துக்கு ஐந்து நாட்களே இருக்கின்றன'' என்று அவன் வாய் முணுமுணுத்தது.

அந்த ஐந்து நாட்களுக்குள்ளேதான் திருவில்லிப்புத்தூரிலிருந்து குலசேகர ஆழ்வார் புறப்பட்டது, திருக்கண்ணபுரம் வந்து சேர்ந்தது — அங்கே அவர் சிவப்பு மூக்குத்திக்காரியைச் சந்தித்தது—அகஸ்தீசுவரம் காட்டில் மெல்லிளங்கோதை அதே சிவப்பு மூக்குத்தியைச் சந்தித்தது — ரவிவர்மன் படைகள் தேடி வந்தது — மார்த்தாண்ட வர்மன், திருவேங்கடத்தான் ஸ்ரீவல்லபர், மெல்லி



ளங்கோதை ஆகிய அனைவரும், கள்ளியங்காட்டுக் கிருஷ்ணன் கோவிலில் அடைக்கலம் புகுந்தது—ஆகிய அனைத்து நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

நாளைக் காலையில் முடிசூட்டு விழா!

அந்த இரவு!

கள்ளியங்காட்டுக் கிருஷ்ணன் கோவிலில், ஸ்ரீவல்லபரும் மற்றோரும் அடைக்கலம் புகுந்த இரவு.....!

வஞ்சி நகரத்து அரண்மனை கோலாகலமாகக் காட்சி அளித்தது.

ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வோர் ஏற்பாடு நடைபெற்றுக் கொண்டிருந்தது.

பகவதி கோயில் பூஜைக்காக ஏராளமான நகைகளையும் தங்க ஆராதனைத் தட்டுக்களையும், ஏழை எளியவர்க்குத் தானம் கொடுக்க வஸ்திரங்களையும், தயார் செய்து கொண்டிருந்தாள் சாலியூர்த் தாவளி!

பத்மாவதியை அலங்கரிப்பதற்கு மும்முரமான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தாள் பள்ளிவிருத்தித் தாவளி!

மகுடாபிஷேக மண்டப அலங்காரத்தை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தாள் மூரின்னூர்த் தாவளி!

இளையதாவளியும் மூத்த தாவளியும் வண்டி வண்டியாக வந்து குவிந்த உணவுப் பொருள்களை எங்கெங்கே இறக்குவது என்று கட்டளையிட்டுக் கொண்டிருந்தனர்.

முடிசூட்டு விழாவின்போது, ஏதேனும் தகராறுகள் நடக்கக் கூடும் என்று எண்ணிய ரவிவர்மன், கோட்டை வெளியில் காவலர்களைக் கூட்டி வைத்து எச்சரித்துக் கொண்டிருந்தான்.

பாண்டி நாட்டிலிருந்து கோவில் அர்ச்சகர்கள் முடிசூட்டு விழாவுக்கு வந்து விட்டார்கள்.

அவர்களைப் பழைய அரண்மனையில் தங்க வைத்தான் ரவிவர்மன்.

கோட்டை மைதானத்தில் அவன் நிற்கும்போது, அகஸ்தீசுவரம் காட்டில் கொல்லப்பட்ட தளபதியின் உடலோடு அவனது குதிரை கோட்டைக்குள் நுழைந்தது.

இதைப் பார்த்துத் திடுக்கிட்ட காவலர்கள், குதிரையிலிருந்து அந்த உடலை இறக்கினார்கள்.

ரவிவர்மனுக்குப் பழையபடியும் திக்கென்று ஒரு பயம் வந்தது.

ஏதோ ஒரு பலமான கூட்டத்தின் ஆதரவில் மார்த்தாண்டவர்மன் இருப்பதாக அவனுக்குத் தோன்றிற்று.

ஆகவே முடிசூட்டு விழாவின்போது மண்டபத்துக்குள் கட்டுக்காவலைப் பலப்படுத்த வேண்டும் என்று அவன் தளபதியை எச்சரிக்கை செய்தான்.

ஒவ்வொருவரையும் சோதித்தபின்னரே உள்ளே அனுப்ப வேண்டும் என்று உத்தரவிட்டான்.

காவலர்களை எச்சரித்துவிட்டு, அவன் அரண்மனைக்குள் திரும்பியதும், சாலியூர்த் தாவளி ஒன்றை நினைவுபடுத்தினாள்

''வழக்கம்போல் மணிமகுடம் எந்தக் கோவிலுக்கும் செல்லவில்லை; அதுவே ஓர் அபசகுனமாயிற்றே'' என்பதுதான் அது.

எல்லாவற்றையும் அலட்சியப்படுத்திய ரவிவர்மனால் அதை அலட்சியப்படுத்த முடியவில்லை.

''நல்லது. நாளைக் காலையில் வேணாட்டுக்கு மகுடத்தைக் கொண்டு சென்று திரும்புவது இயலாத காரியம்.

''இன்றிரவே பகவதி அம்மன் கோயிலில் வைத்துப் பூஜை செய்துவிடுவோம்'' என்றான்.

மளமளவென்று ஏற்பாடுகள் நடந்தன.

பகவதி அம்மன் கோவிலுக்கு ஏராளமான விளக்குகள் கொண்டு போகப்பட்டன.

உடனே கோயிலுக்கு வரும்படி பூசாரிக்கு உத்தரவிடப்பட்டது.

ஏராளமான காவலர்களோடு தாவளி சகோதரிகள், கோயிலுக்குச் சென்று, அணிமணிகளால், அம்மனை அலங்காரம் செய்தார்கள்.

அமைச்சர் பிரதானிகள் மட்டுமே வரவழைக்கப்பட்டார்கள்.

நள்ளிரவில் அர்த்தஜாம பூஜையின் போது, மகுடத்துக்கும் பூசை செய்வதாக ஏற்பாடு!

அவன் பூஜியானுவுக்கும் சொல்லி அனுப்பத் தவறவில்லை.

புறப்படும் நேரம் வந்து விட்டது.

தானும் தன் நாயகியும் மட்டுமே மகுடத்தை எடுத்துச் செல்வது என்று முடிவு கட்டினான் ரவிவர்மன்.

அலங்காரத் தேவதையாக நின்ற பத்மாவதியும் அவனும் மகுடம் இருக்கும் பெட்டகத்தைத் திறந்தார்கள்.

தேடினார்கள்; தேடினார்கள்! மகுடத்தைக் காணவில்லை!

இங்கே அவர்கள் மகுடத்தைத் தேடிக் கொண்டிருக்கும் போது, சாலியூர்த் தாவளி, அங்கே பகவதி அம்மன் கோவிலில், தன் கையாலேயே அம்மனுக்கு அலங்காரம் செய்து கொண்டிருந்தாள்.

புதிய புதிய நகைகளை எடுத்து அவள் கொடுக்கப் பூசாரி அணிவித்துக் கொண்டிருந்தான்.

பகவதி அம்மனுக்குக் கழுத்தணி அணிவிக்கும்போது பூசாரி, சிலையின் முகத்தைக் கூர்ந்து கவனித்துவிட்டு, ''தாயே!'' என்று கதறினான்

பதறிப் போய் ''என்ன என்ன?'' என்று கேட்டாள் சாலியூர்த் தாவளி!

''இருநூறு ஆண்டுகளாக, தாயின் மூக்கில் அணிவிக்கப்பட்டிருந்த சிவப்பு மூக்குத்தியைக் காணோம்'' என்று துடித்தான் பூசாரி. (தொடரும்)

# லக்மே லவெண்டர் டால்க்

## கொஞ்சி மணக்கும்...
## பிரெஞ்சு மயக்கம்.

தரித்துக் கொள்வீர்
லக்மே லவெண்டர் டால்க்.
பூத்த புது பிரெஞ்சு
லவெண்டர் பூக்களின்
நேர்த்தியான மணம்.
லக்மே லவெண்டர் டால்க்

**உங்கள் எழில்:**
**எங்கள் தொழில்.**




லக்மே

dCAIL-VC-LT/1N TAM.



பெங்களூர் காயன சமாஜத்தின் எழுபதாண்டு விழாவில் அதன் வளர்ச்சிக்குப் பெரிதும் பாடுபட்ட திரு வி. டி. சீனிவாசனின் உருவப்படத்தைக் கல்கி அதிபர் ஸ்ரீ சதாசிவம் திறந்து வைக்கிறார்.

# 'விட்டேனா பார்' சீனிவாசன்!

இந்து பத்திரிகையைத் தினசரி பார்த்து வருபவர்கள் அதில் ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதியில் அடிக்கடி பெங்களூர் வி. டி. சீனிவாசன் என்ற பெயரைக் கவனித்திருக்கலாம். 'இந்தப் போடு போடுகிற இந்த வி.டி. சீனிவாசன் யார்?' என்று தெரிந்துகொள்ளும் ஆர்வத்தைப் பூர்த்தி செய்துகொள்ள நினைத்தால் சென்னையில் சங்கீத சீஸன் சமயத்தில் கலை நிகழ்ச்சிகள் நடக்கும் இடங்களில் போய்ப் பாருங்கள். அங்கே டிசம்பர் குளிரிலும் கூட கையில் விசிறியுடன் ஒருவர் நின்றார் என்றால் அவர்தான் பெங்களூர் வி. டி. சீனிவாசன்!

திரு வி. டி. எஸ். சங்கீதப் பிரியர், ரசிகர் என்றெல்லாம் சொன்னால் போதாது; சங்கீதத்தின் மேல் மோகம் கொண்டவர், சங்கீதத்தின் மேல் காதல் கொண்டவர், சங்கீதத்துக்காகவே வாழ்கிறவர் என்றெல்லாமும் கூறலாம்.

அதனால்தான் நாலணா கொடுக்கும் அங்கத்தினர்களுடன் ஆரம்பமான பெங்களூர் காயன சமாஜம் இன்று கிட்டத்தட்ட இரண்டரை லட்ச ரூபாய் பெறுமானமுள்ள சொந்த அரங்கத்துக்கு உரிமை கொண்டாடுகிறது.

இந்த அளவுக்கு சமாஜம் வளர வி. டி. எஸ். எடுத்துக் கொண்ட விடாமுயற்சிகள், அப்போது அவர் பெற்ற அனுபவங்கள் எல்லாம் கதை போலிருக்கின்றன. அவற்றை அறிந்தவர்கள், ''அவர் வி. டி. சீனிவாசன் இல்லையப்பா, விட்டேனா பார் சீனிவாசன்!'' என்று மகிழ்ச்சியும் பெருமிதமும் கலந்த தொனியில் வர்ணிப்பார்கள்.

சமாஜத்துக்குச் சொந்தத்தில் கட்டடம் வேண்டுமென்றால் முதலில் மனை தேவை என்ற எண்ணத்தில் அவர் அன்று மைசூர் திவானாக இருந்த திரு மாதவ ராவை அணுகினார். ''கட்டடம் எழுப்ப எவ்வளவு பணம் இருக்கிறது?'' என்று மாதவராவ் கேட்டார். இரண்டாயிரம் ரூபாய்தான் சமாஜத்தின் கையிருப்பு என்று அறிந்ததும் சிரித்தார். ''கட்டிட நிதி என்று ரூ. 10,000மாவது திரட்டிக் கொண்டு வா; பிறகு மனை ஒதுக்குவது பற்றி யோசிக்கலாம்'' என்று கூறி விட்டார் திவான்.

திரு வி. டி. எஸ். சளைக்காமல் திவானின் நிபந்தனையைப் பூர்த்தி செய்து கொண்டு போய் நின்றார். ஆனால் அப்போது அரசு இனமாக வழங்கக் கூடிய மனைகளுக்கு ஏற்கெனவே பலர் உரிமை கொண்டாடிக் கொண்டிருப்பது புரிந்தது. எனவே திவான் மாநகராட்சிக்குச் சிபாரிசு செய்தார், காயன சமாஜத்துக்கு மனை வழங்கும்படி.



கர்நாடகத்தின் வருவாய்த்துறை அமைச்சர் கனம் ஹுச்மாஸ்திகௌடா, திரு வி. டி. சீனிவாசனுக்குக் கான கலா சேவா திலகம் என்ற விருது வழங்குகிறார். வலப்புறம் மல்லேசுவரம் ராம சேவா மண்டலியின் காரியதரிசி திரு வி. பாஸ்கர்.

இதற்கு மாநகராட்சி அங்கத்தினரிடையே பலத்த எதிர்ப்பு! அன்றைய மேயர் ஷேக்ஸ்பியரைத் துணைக்கு அழைத்து, சங்கீத ரசனையற்றவர்களையெல்லாம் ஷேக்ஸ்பியர் எப்படி வாங்கு வாங்கு என்று வாங்கியிருக்கிறார் என்பதை எடுத்துரைத்தார். அவ்வளவுதான், உடனே அங்கத்தினர்கள் மனம் மாறி மனை வழங்கச் சம்மதம் தெரிவித்தனர்.

ஆயினும் இவ்விதம் வழங்கப்பட்ட மனை காயன சமாஜ அங்கத்தினர்கள் சுலபமாய்ச் சென்று வரக் கூடிய வசதியான இடத்தில் இல்லை. திரு வி. டி. எஸ். தானம் தரப்பட்ட மாட்டின் பல்லைப் பிடித்துப் பார்க்கவும் தயாராயில்லை. அதை விடப் பெரிய திட்டம் வைத்திருந்தார்!

வேறு ஒரு மனை வசதியான இடத்தில் ரூ. 16,000 விலைக்கு வந்தது. இவர் உடனே நகராட்சியினரிடம் சென்று, ''நீங்கள் தானம் கொடுத்த மனையை நான் வேறு ஒருவருக்கு விற்றால் நன்றாயிராது; நீங்களே எடுத்துக் கொண்டு பணமாகத் தந்துவிடுங்கள்'' என்றார்! அதன்படி மாநகராட்சி தனது மனையைத் தானே 12,000க்கு வாங்கிக் கொண்டது! மேலும் நாலாயிரம் ரூபாய் வேறு விதங்களில் புரட்டினார் வி. டி. எஸ். மனை குதிர்ந்து விட்டது சமாஜத்துக்கு!

மத்திய அரசு, நன்கு ஸ்தாபிதமான இசை நிறுவனங்களுக்கு லட்ச ரூபாய் வரை மானியம் அளிக்கத் தயாராயிருந்தது. ஆனால் அந்த நிறுவனம் தானும் லட்ச ரூபாய் போட வேண்டும் என்ற நிபந்தனை. திரு வி. டி. எஸ். அரும்பாடு பட்டு ரூ. 75,000 சேகரித்தார். (இதில் ரூ. 40,000 வரை ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் வழங்கிய உதவி நிதிக் கச்சேரிகளால் கிடைத்ததாகும்.) அரசு ரூ. 75,000 தந்தது. சமாஜத்தின் சொந்த அரங்கமும் உருவாயிற்று.

திரு வி. டி. எஸ். அவர்களுக்குப் பலப் பலரது உழைப்பும் பண உதவியும் சமாஜத்தை இந்நிலைக்குக் கொணரப் பக்கபலமாய் இருந்திருக்கிறது என்பது உண்மைதான். ஆனால் இந்த உழைப்பு, உதவிகளையெல்லாம் ஒன்றுதிரட்டி ஒருமுகப்படுத்தி ஆற்றலும் அனுபவமும் செல்வாக்கும் நேர்மையும் கொண்ட ஒருவர் தேவையல்லவா? அந்த ஒருவராக திரு வி. டி. எஸ். விளங்கியதால் சமாஜம் அவரைச் சென்ற ஆண்டு தனது 70வது ஆண்டு விழாவின்போது கௌரவித்தது. திரு வி. டி. எஸ். அவர்களின் புகைப்படத்தை அவரது அத்யந்த நண்பர் திரு சதாசிவம் திறந்து வைத்து மகிழ்ந்தார்.

சமாஜத்தைச் சேர்ந்தவர்களே, சமீப காலம்வரையில் தங்கள் கௌரவக் காரியதரிசியாகவும் துணைத் தலைவராகவும் இருந்த ஒருவரைப் பாராட்டுவது, நன்றி மறவாத செயல்தான். ஆனால் இதைவிடப் பெரிய கௌரவம் ஒன்று அண்மையில் திரு வி.டி. எஸ். அவர்களுக்குக் கிடைத்தது. மல்லேசுவரத்தில் இயங்கும் ராம சேவா மண்டலி, திரு வி. டி. எஸ். இசை வளர்ச்சிக்காகச் செய்துள்ள சேவையைப் பாராட்டி, ''கான கலா சேவா திலகம்'' என்ற பட்டத்தை வழங்கியது. ஒரு சபாவுக்காக உழைத்து வெற்றி கண்டவரை மற்றோர் அமைப்பு பாராட்டுவது மிகவும் விசேஷம் அல்லவா?

மூன்று ராஜ்யங்களில் பிரதம கணக்காளராகவும், மூன்று ரயில்வேக்களில் பிரதம ஆடிட்டராகவும் இரண்டு ஆண்டுகள் இந்திய டெலிபோன் தொழிலகத்தில் நிதி நிர்வாகியாகவும் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள திரு வி. டி. சீனிவாசன் அவர்களை, ''உத்தியோக வாழ்வில் உங்களுக்குள்ள எத்தனையோ பல சிரமங்களுக்கிடையில் சங்கீதத் துறையிலும் இவ்வளவு ஈடுபாடு கொண்டீர்களே அதனால் உங்களுக்கு என்ன பலன்?'' என்று கேட்டால்,

''மதிப்புக்குரிய கர்நாடக இசைக் கலைஞர் பலருடைய நட்பு எனக்குக் கிடைத்திருக்கிறது; அவர்கள் இசையைக் கேட்டு ஆனந்திக்கும் அதிர்ஷ்டம் கிடைத்திருக்கிறது; அவர்களுக்கு விருந்தோம்பும் பாக்கியம் கிட்டியிருக்கிறது; போதாதா?'' என்கிறார்.

**– குட்டி கிருஷ்ணன்**

---

## நெஞ்சை விட்டு நீங்காத காட்சி



**சிவாஜி கணேசன், கமலஹாசன், ஜெயசித்ரா, மஞ்சுளா** நடித்த 'சத்யம்' என்னும் திரைப்படத்தில் உங்கள் நெஞ்சை விட்டு நீங்காத காட்சி எது என்று குறிப்பிட்டுச் சுருக்கமாக ஒரு தபால் கார்டில் எழுதி யனுப்பவும். 10–6–76 தேதிக்குள் கிடைக்கும் கடிதங்களை மட்டுமே பரிசீலிப்போம். எந்தக் காட்சி அதிகமான வாசகர்கள் மனத்தைக் கவர்ந்துள்ளதோ அந்தக் காட்சி பற்றி டைரக்டர் **எஸ். ஏ. கண்ணன்** தம் அனுபவங்களைக் கல்கி நேயர்களுடன் பகிர்ந்து கொள்வார். உங்கள் மனம் கவர்ந்த காட்சி பற்றி டைரக்டரை என்ன கேட்க விரும்புகிறீர்கள் என்பதையும் தெரியப் படுத்தலாம்.

---

# வில்லாக வளையும் உடல்!

டாக்டர் நஞ்சண்டராவ்

**ப**ட்டறையில் வேலை செய்து கொண்டிருக்கும் போது கையில் உளி பாய்ந்து காயம் பட்டுவிட்டது என்று தன் கணவனை அழைத்து வந்தாள் அப்பெண்மணி. வீட்டிலேயே கை வைத்தியமாகச் சிகிச்சை அளிக்கப்பட்டதாம். "இரண்டு மூணு நாட்களாவே காய்ச்சல் இருந்து வருது. இன்னிக்குக் காலையிலிருந்து காய்ச்சல் கடுமையாய் இருக்கு. தாடையை அசைக்க முடியல்லே. மத்தியானம் இவருக்குப் பல் எல்லாம் கிட்டிச்சுப் போச்சு. முகத்திலே ஒரு மாதிரியா வலிப்புக் கூட வந்தது" என்று கணவனின் நிலையை விளக்கினாள்.

நோயாளிக்கு 104 டிகிரி ஜுரம் இருந்தது. கையில் போடப்பட்டிருந்த கட்டை அவிழ்த்துக் காயத்தைச் சோதித்த பிறகு குளிர் பதனப் பெட்டியிலிருந்து ஏ. டி. எஸ். எடுத்து வந்து சிறிது சிறிதாக ஊசி மூலம் இடது கையில் செலுத்தினேன். சற்றைக்கெல்லாம் நோயாளியின் வலது கையில் 'டாக்ஸாய்டு' என்னும் மருந்தை ஊசி மூலம் செலுத்தினேன். அவரை உடனே மருத்துவ மனைக்கு அழைத்துச் செல்லும்படி வற்புறுத்தினேன்.

"இது என்ன வியாதிங்க? இவரு உசிருக்கு ஒண்ணும் ஆபத்து இல்லையே?" என்று நடுங்கும் குரலில் கேட்டாள் அவரது மனைவி.

வில்வாத ஜன்னி எனப்படும் 'டெடனஸ்' வியாதிக்கு உரிய சிகிச்சை அளிக்கும் வசதிகள் மருத்துவ மனையில்தான் உண்டு என்பதை விளக்கிச் சொன்னேன்.

**"எப்படி ஏற்படுகிறது இந்நோய்?"**

"பொதுவாகக் கிராமப் பகுதிகளில் சாணம், சேறு உள்ள இடங்களில் புழங்குபவர்களுக்கு 'டெடனஸ்' ஏற்படும் வாய்ப்பு அதிகம். வைரஸ் கிருமிகளால் ஏற்படும் நோய் இது. உடலில் ஏற்படும் சிறிய சிராய்ப்பிலிருந்து பெரிய ரணங்கள் வரை பல வகையான காயங்கள் இந்நோய் தோன்றக் காரணமாக அமையும்.

**"மருத்துவ மனையில் இதற்கு என்ன சிகிச்சை அளிப்பார்கள்?"**

"பெனிசிலின் மருந்து 10 லட்சம் யூனிட்டுகள் வரை ஏழு நாட்களுக்குச் செலுத்தும்படி இருக்கும். முறுக்கேறிய தசைகள் தளர்ந்து இயல்பாக இருக்கவும் சில மருந்துகள் கொடுக்க நேரும். குளுகோஸ் கரைத்த தூய நீர் (Distilled Water) ஊசி மூலம் இரத்தக் குழாய்க்குள் செலுத்த வேண்டும். தசைகள் முறுக்கேறி நரம்புகள் புடைத்து, நோயாளி தன் உடம்பையே வில்லாக வளைத்துக் கொள்வது இந்நோயின் கொடுமை. அது காரணமாகவே இதற்கு வில்வாத ஜன்னி என்ற பெயர் ஏற்பட்டது.

**"இந்நோய் வராமல் தடுக்க என்ன வழி?"**

"குழந்தை பிறந்தவுடன் மூன்றுவது மாதத்திலிருந்து டிரிபின் ஆண்ட்டிஜென் என்னும் தடுப்பு ஊசி போட்டால் 'டெடனஸ்' வியாதி வராமல் தடுக்கலாம்."

**"அந்தத் தடுப்பு ஊசி போட்டுக் கொள்ளாத பெரியவர்களுக்கு வந்தால்....? ஏ.டி.எஸ். போட்டுக் கொண்டால் போதுமா?"**

"டிரிபின் ஆண்டிஜென் போட்டுக் கொண்டிராதவர்களுக்கு 'டாக்ஸாய்டு' கைகண்ட மருந்து. போட்டுக் கொண்டபின் காய்ச்சல், மயக்கம் எதுவும் வராது. மூன்று வெவ்வேறு மாதங்களில் இந்த ஊசி போட்டுக்கொண்டு விட்டால் **நிரந்தரப் பாதுகாப்பு** அளிக்கிறது. ஒரு தடவை இந்த ஊசி போட்டுக் கொள்ளச் சுமார் மூன்று ரூபாய்தான் ஆகும்."

**"அப்படியென்றால் 'டெடனஸ்' வியாதியைத் தடுக்க ஏ.டி.எஸ். பயனளிப்பதில்லையா?"**

"ஏ. டி. எஸ். எனும் ஸீரம் குதிரையிலிருந்து எடுக்கப்படுவதால் மனிதர்களுக்கு அந்த மருந்தை ஊசி மூலம் செலுத்தும்போது மனித உடல் அதனைச் சீராக ஏற்றுக் கொள்வதில்லை. மனித உடலிலிருந்தே எடுக்கப்படும் ஏ. டி. எஸ். ஸீரம் பம்பாய் போன்ற சில இடங்களில் மட்டுமே கிடைக்கும். விலை மிக அதிகம். ரூ. 150 வரை ஆகலாம். இங்கு கிடைக்கும் ஏ. டி. எஸ். ஊசி மருந்து ஒரு முறை போட்டுக் கொண்டால் ஆறு மாதங்களுக்கு மட்டுமே பாதுகாப்பு அளிக்கும். அதன் பின்னர் அதே நபருக்கு மீண்டும் காயம் பட்டால், மீண்டும் ஏ. டி. எஸ். செலுத்தினால் ஏழு நாட்களுக்கு மட்டுமே பாதுகாப்புத் தரவல்லது. அதுவும், உடல் ஏற்றுக் கொண்டால்தான். டாக்ஸாய்டு அப்படியல்ல. உடலில் நிரந்தரமான எதிர்ப்புச் சக்தியை (Anti bodies)த் தோற்றுவித்து இக்கொடிய நோயினின்றும் பாதுகாப்பு அளிக்கிறது."

**டாக்டர் ஆர். நஞ்சண்டராவ்** கூறக்கேட்டு எழுதியவர் : **ஆர். பி.**

குழந்தைக்கு ஏ. டி. எஸ். ஊசி போடப்படுகிறது.



# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 36. மறுப்பும் மன்னிப்பும்

பிறர் பிழையைப் பொறுத்தலும்
தன் பிழைக்கு வருந்தலும்
வருந்தி ஈடு செய்தலும்
சிறப்புமிகு தகைமையாம்

தேசபக்தர் சத்தியமூர்த்தியை ஒரு தீரராகப் போற்றினார் கல்கி; அத்தலைவருக்கு அஞ்சலியாக எழுதிய கட்டுரைத் தொடருக்கு ''தீரர் சத்தியமூர்த்தி'' என்று தலைப்புக் கொடுத்தார். (1943 ஏப்ரல் பத்தாம் தேதிய கல்கி இதழில் ஆரம்பமாயிற்று அத்தொடர்) அதற்கு முன், அன்னாருக்கு இறுதி மரியாதை செலுத்திவிட்டு வந்து, உணர்ச்சிப் பெருக்குடன் எழுதிய ஒரு குறிப்பில், அத்தீரர் அடைந்தது ''வீர சொர்க்கம்' என்றார்.

''துரதிர்ஷ்டம் பிடித்த இந்த அடிமை நாட்டில் வாழ்வதைக் காட்டிலும் செத்துப் போவதே மேல் என்று நம்மில் பலர் அடிக்கடி எண்ணியிருக்கிறோம். அந்த மேலான காரியத்தை ஸ்ரீ சத்தியமூர்த்தி சாதித்து விட்டார். அருமைத் தாய் நாட்டுக்குச் சுயராஜ்யம் வந்து பார்க்காமலும், செல்வப் புதல்விக்குக் கல்யாணம் பண்ணிப் பார்க்காமலும் கண்ணை மூடிவிட்டார்.

பாரதத் தாய் ஒரு சிறந்த புதல்வரை இழந்தாள். தமிழ் நாடு ஓர் அரிய தலைவரைப் பறிகொடுத்தது. காங்கிரஸ் மகா சபை தன்னுடைய மகத்தான வீரர்களில் ஒருவரை இழந்தது. அதிகாரவர்க்கத்துக்கு ஒரு பெரிய கிலி நீங்கிற்று. தீட்டிய சட்டியைக் காட்டிலும் கூரிய அவருடைய நாவன்மை மறைந்துவிட்டது. சங்கீதத்தைக் காட்டிலும் இனிய அவருடைய பிரசங்கங்களை இனி நாம் கேட்கப் போவதில்லை. போர்க்களத்தில் மடிவோர் வீர சொர்க்கம் புகுவார்கள் என்ற நம்பிக்கை நமது நாட்டில் வெகு காலமாய் உண்டு. ஸ்ரீ சத்தியமூர்த்தி போர்க்களத்தில் படுகாயப்பட்டு வெளியேறி மடிந்த வீர புருஷர் என்பதில் ஐயமில்லை.

(கல்கி இதழ் 1-4-43)

சத்தியமூர்த்தியின் திறமைகளையும் பண்புகளையும் சாதனைகளையும் அவ்வப்போது கல்கி பாராட்டி எழுதினார். ஆனால் அதே சமயம், அவருடைய அரசியல் போக்குகள் செயல்கள் சிலவற்றைத் தாக்கியும் எழுதினார்; 1941-42ல் சத்தியமூர்த்தி வெளியிட்ட கருத்துக்களையும், ராஜாஜிக்கு எதிராக மேற்கொண்ட நடவடிக்கைகளையும் கடுமையாகவே தாக்கினார். அது பற்றிக் கல்கியே சொன்னது :

ஸ்ரீ சத்தியமூர்த்தியைச் சில சமயம் நான் கடுமையாகத் தாக்க வேண்டி நேர்ந்திருக்கிறது (எழுத்திலேதான்!) அப்போதெல்லாம் ராஜாஜி தமது ஆட்சேபத்தைத் தெரிவிக்காமல் இருந்தது கிடையாது. கடைசியில் ஸ்ரீ சத்தியமூர்த்தி ஜெனரல் ஆஸ்பத்திரி







யில் நோய்ப் படுக்கையில் இருந்தபோது, அவரைப் போய் நான் தரிசிக்க நேர்ந்ததும் ராஜாஜியின் மூலமாகத்தான்.

("தீரர் சத்தியமூர்த்தி")

ராஜாஜியும் சத்திய மூர்த்தியும் அரசியல் துறையில் நெடுகிலும் பிணங்கிஇருந்தார்கள் என்றும், சென்னை மாகாணத்தில் சத்திய மூர்த்தி ஆட்சிப் பதவி ஏதும் வகிக்கமுடியாத படி ராஜாஜி சூழ்ச்சி



செய்தார் என்றும், அப்போது போல இப்போதும் சிலர் சொல்லிக் கொண்டும் எழுதிக் கொண்டும் இருக்கிறார்கள். இந்தக் கூற்றைக் கல்கி மறுத்து, தமது "தீரர் சத்திய மூர்த்தி" கட்டுரைத் தொடரில் ஒரு குறிப்பு எழுதினார்; பின்னர், "நாட்டுக்கு ஒரு புதல்வர்" தொடரில் அதையே இன்னும் விளக்கமாய் எழுதினார். இரு பெரும் தலைவர்களின் வாழ்க்கையும் நாட்டின் அரசியல் வரலாறும் சம்பந்தப்பட்டதான இந்த மறுப்பு இங்கே இடம் பெறத்தக்கது :

★ கல்கியின் கடுமையான தாக்குதலுக்கும் மனப்பூர்வமான பாராட்டுக்கும் உரியவரான தீரர் சத்தியமூர்த்தி. ★ கல்கியின் தாக்குதலுக்கு உள்ளான ஓர் ஆருயிர் நண்பர் அ. சீநிவாசராகவன். ★ சகுந்தலா பாரதி உள்ளடங்கிய பாரதியின் குடும்பத்தினருக்குப் பாரதி மண்டபத் திறப்பு விழாவின்போது ஏற்பட்ட குறையைப் பிறகு நிவர்த்திசெய்தார் கல்கி. ★ அதிகமாகத் தாக்கி எழுதக் கூடாது என்று கல்கிக்கு இரு வேறு காரணங்களுக்காக அறிவுரை வழங்கிய இரு பெரியார்கள். ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார், ராஜாஜி.





புதிய அரசியல் திட்டத்தை யொட்டி 1938ல் மாகாண சட்ட சபைத் தேர்தல்கள் வந்தன. சென்னை மாகாண சட்டசபையில் காங்கிரஸ் கட்சிக்கு யார் தலைமை வகிப்பது என்ற கேள்வி எழுந்தது. சட்டசபைத் திட்டத்தில் ஆதி காலத்திலிருந்து நம்பிக்கை கொண்ட ஸ்ரீ சத்தியமூர்த்திதான் மாகாண சட்டசபையில் பிரவேசித்துத் தலைவராக வேண்டும் என்று ராஜாஜி அபிப்பிராயப்பட்டார். ஆனால், அதற்குச் சில காலத்துக்கு முன்பு மத்திய இந்திய சட்டசபைத் தேர்தலில் (நீதிக் கட்சியின் வேட்பாளர்) ஸர் ஏ. ராமசாமி முதலியாரைத் தோற்கடித்து வெற்றிக்கொடி நாட்டியிருந்த ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி அதற்கு இஷ்டப்படவில்லை. மாகாண சட்டசபைக்குத் தான் வந்தால், ஆந்திரர்கள் தம்மைத் தலைவராக ஏற்றுக் கொள்வார்களா என்ற சந்தேகமும் அவருக்கு இருந்தது. எனவே, ராஜாஜிதான் மாகாண சட்ட சபைத் தேர்தலுக்கு நின்று பிரதம மந்திரியாக வேண்டும் என்று ஸ்ரீ சத்தியமூர்த்தி வற்புறுத்தினார்...

ஸ்ரீ சத்தியமூர்த்தியுடன் போட்டியிட்டு அவர் பிரதம மந்திரியாவதற்கு விடாமல் ராஜாஜி அப்பதவியைக் கைக்கொண்டதாகவும், பிற்பாடு, ஸ்ரீ சத்தியமூர்த்தியை மந்திரிசபையில் சேர்த்துக் கொள்ள மறுத்து விட்டதாகவும் சிலர் சொல்லுவதை நான் கேட்டிருக்கிறேன். இந்த அபவாதத்தை இன்று வரையில் சிலர் திருப்பித் திருப்பிச் சொல்லி வருகிறார்கள். இப்படிச் சொல்லி வருகிறவர்கள் ராஜாஜியையோ சத்தியமூர்த்தியையோ கொஞ்சமும் அறிந்தவர்கள் அல்ல என்பது நிச்சயம். இரண்டு பேர் மீதும் வீண் அவதூறு சொல்கிறார்கள் என்பதிலும் சந்தேகம் இல்லை.

1938ல் சென்னை சட்டசபைத் தேர்தல் நடந்த சமயத்தில் ராஜாஜியும் ஸ்ரீ சத்தியமூர்த்தியும் நெருங்கிய நட்புரிமை கொண்டிருந்தார்கள். சட்டசபைத் தேர்தல் விஷயமாக அவர்களுக்குள் பேச்சு நடந்தபோது, நானும் அருகில் இருக்க நேர்ந்தபடியால், இதைப்பற்றி நான் நிச்சயமாகச் சொல்லக் கூடும். ஸ்ரீ சத்தியமூர்த்தியே சர்வகலாசாலைத் தொகுதியில் நிற்க வேண்டும் என்றும், சட்டசபையில் காங்கிரஸ் கட்சித் தலைவராகவும் பிரதம மந்திரியாகவும் வரவேண்டும் என்றும் ராஜாஜி திரும்பத் திரும்பச் சொன்னதையும், ஸ்ரீ சத்தியமூர்த்தி அதை மறுத்து ராஜாஜி தான் நிற்க வேண்டும் என்று வற்புறுத்தியதையும் நான் அறிவேன். ராஜாஜி பிரதம மந்திரியான பிறகு ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு மந்திரி சபையில் இடம் கொடுக்க மறுத்தார் என்பது பெரிய

பொய்யாகும். எந்த நிமிஷத்திலும் தம் மந்திரி சபையில் ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு இடம் கொடுக்க ராஜாஜி தயாராக இருந்தது மட்டும் அல்ல; பலமுறை வற்புறுத்தி அழைத்ததும் உண்டு...

ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களிடம் ராஜாஜி எவ்வளவு உண்மையான அபிமானம் கொண்டிருந்தார் என்பதை நான் அறிவேன். உப்புச் சத்தியாக்கிரக இயக்கத்தின்போது ஸ்ரீ சத்தியமூர்த்தி ஒதுங்கி நின்று விட்டால், அவருடைய அரசியல் வாழ்க்கையில் ஒரு பெரிய குறையாக இருக்கும் என்று, நேரில் அவரைத் தேடிச் சென்று சட்டமறுப்புக்கு அழைத்துச் சென்றதை அறிவேன். அதற்குப் பிறகு பத்து வருஷ காலம், அதாவது 1940 வரையில், ராஜாஜி ஸ்ரீ சத்தியமூர்த்தி ஆகிய இருவரிடமும் பழகும் சந்தர்ப்பம் எனக்கு வாய்த்திருந்தது. இந்தப் பத்து வருஷமும், அவர்கள் சொந்த முறையிலும், அரசியலிலும் மனமொத்த சிநேகிதர்களாகவே இருந்து வந்தார்கள். 1941க்குப் பிறகுதான் நிலைமை மாறியது. ("நாட்டுக்கு ஒரு புதல்வர்")

1941க்குப் பிறகு மாறிய நிலைமையில், ராஜாஜியை வேண்டாதார் நடத்திய எதிர்ப்புக் கிளர்ச்சிகளை முன்பு பார்த்தோம்; அவற்றை முறியடிப்பதற்காக, ராஜாஜியின் மெய்க் காவலராய்க் கல்கி கொடுத்த சொற்போர்களையும் பார்த்தோம். அந்தப் போர்களில், தமது சொல்லம்புகளுக்கு இலக்கானவர்களிடம், பின்னொரு சமயத்தில், மிக உயரிய பெருமையை ராஜாஜி அடைந்த மகத்தான வேளையில், கல்கி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்:



என் பக்கத்து வீட்டுக்காரர்கள் எப்போதுமே எங்கள் வீட்டு டெலிபோனைத்தான் உபயோகிப்பார்கள். பரவாயில்லை என்று இருந்தேன். ஒரு நாள் அந்த வீட்டுக்காரரின் 'லெட்டர்-ஹெட்' காகிதத்தைப் பார்த்தேன். அதில் எங்கள் வீட்டு டெலிபோன் நம்பரையும் சேர்த்து அடித்துக் கொண்டிருந்தார்கள்!

— டிட்பிட்ஸ் கடிதம்

மூன்று வருஷத்துக்கு முன்னால் தமிழ் நாட்டில் துரதிர்ஷ்ட வசமாகத் தோன்றிய வாதப் பிரதிவாதங்கள் கனவோ, மாயையோ என்று எண்ணும்படியாக மறைந்து விட்டன. அவற்றை இச்சமயம் ஞாபகப்படுத்துவதுகூட உசிதமன்று. ஒரு முக்கியமான காரணத்தை முன்னிட்டு ஞாபகப்படுத்த வேண்டியிருக்கிறது. ராஜாஜி சம்பந்தமான வாதப் பிரதிவாதங்கள் ''கல்கி''யின் மூலம் அதிகமாக வளர்ந்தன என்று இரு சார்பிலும் சில நண்பர்கள் கருதினார்கள். இந்தக் காலத்துச் சிறந்த தமிழ் மகானுடைய தொண்டைத் தமிழகம் இழந்துவிடக் கூடாதே என்னும் கவலையையும் ஆர்வத்தையும் தவிர, வாதப் பிரதிவாதங்களில் ஈடுபட்டதில் நமக்கு வேறு எவ்வித நோக்கமும் கிடையாது.

அதிக ஆர்வம் காரணமாக யாருடைய மனமாவது புண்படும்படி ஏதேனும் ''கல்கி''யில் எழுதப்பட்டிருந்தால் அதற்காக நம் வருத்தத்தை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்கிறோம். தமிழ்த் தாயின் புதல்வர் ஒருவர், சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலாகப் பதவி ஏற்கும் இந்தச் சந்தர்ப்பத்தில், தமிழ்மக்கள் எல்லோரும் ஏகோபித்து மகிழ்ச்சி அடைய வேண்டியது நியாயம். அந்த மகிழ்ச்சிக்குத் தடையாக எதுவுமே நிற்கக் கூடாது அல்லவா?

(கல்கி ராஜாஜி மலர் 20-6-48)

அரசியல் கருத்துக்களை வலிமையுடன் எடுத்துரைக்கும் காரணத்தால், தமது பத்திரிகை பல பெரிய மனிதர்களின் கோபதாபங்களுக்கு இலக்காக நேர்ந்தது பற்றி, பின்னொரு சமயம் கல்கி குறிப்பிட்டு, அவற்றை வெளியிடுவது சம்பந்தமான கொள்கை என்ன என்பதை விளக்கிச் சொன்னார்:

மனிதர்கள் யாராயிருந்தாலும் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாய் இருந்தாலும் அவர்களிடத்தில் சொந்த முறையில் கல்கிப் பத்திரிகைக்கு விருப்போ வெறுப்போ கிடையாது. பொது வாழ்வில் அவர்கள் சொல்லும் வார்த்தையும், செய்யும் காரியமும்தான் நமக்கு முக்கியமானவை. நம்முடைய கவனத்துக்கு உரியவை. நேற்று ஒருவர் பொது வாழ்க்கையில் தவறான காரியம் செய்தால் அதை எடுத்துக் காட்டத் தயங்கியதில்லை. இன்றைக்கு அதே மனிதர் பொது நன்மைக்கு உகந்த காரியம் செய்தால் அதைப் பாராட்டத் தயங்கியதும் இல்லை. இந்தப் பத்திரிகை தர்மத்தை அறிந்து கொள்ள முடியாதவர்கள் ஏதாவது உளறிக் கொட்டுவார்களே என்று கவலைப்பட்டதும் இல்லை. (கல்கி இதழ் 7-8-49)

இதற்கு நாலு ஆண்டுகளுக்கு முன்னால், தமது தொழில் துறை சகாக்கள், வேற்றுமைகளையும் விவாதங்களையும் மறந்து, பாரதி மண்டபத் திருப்பணியில் தமக்கு உதவி செய்ததற்காக, இதய நெகிழ்ச்சியுடன் அவர்களுக்குக் கல்கி நன்றி தெரிவித்தார்:

இதற்கு உதவி செய்தவர்களைப் பற்றி நினைக்கும்போது, முதல் முதலில் என்னுடைய சகோதரப் பத்திரிகாசிரியர்கள், எழுத்தாளர்கள், இவர்களுடைய உதவிதான் முன்னால் நினைவுக்கு வருகிறது. பல சமயங்களில் என்னுடைய சகோதரப் பத்திரிகாசிரியர்களுடனும் எழுத்தாளர்களுடனும் மாறுபட்ட அபிப்பிராயங்களை நான் தெரிவிக்க வேண்டியிருந்ததுண்டு. காரசாரமான விவாதங்கள் பல எங்களுக்குள் நிகழ்ந்திருக்கின்றன. அரசியலிலும் கலைத் துறையிலும் மற்றவர்களின் அபிப்பிராயத்துக்கு

மாறுபட்ட அபிப்பிராயங்களைப் பல சமயம் நான் வற்புறுத்திச் சொல்லவேண்டியதாய் இருந்திருக்கிறது.

மேற்கூறிய வாதப் பிரதிவாதங்கள், அபிப்பிராய பேதங்கள் முதலியவற்றை இந்த அரும் பெரும் காரியத்துக்குத் தடையாக வைத்துக் கொள்ளாமல், தமிழ் நாட்டுப் பத்திரிகாசிரியர்கள், எழுத்தாளர்கள் அனைவரும் ஒருமுகமாக எட்டயபுரம் ஞாபகச் சின்ன முயற்சியை ஆதரித்தார்கள். (இவர்களுக்கு) என் மனமார்ந்த வந்தனங்களை முதன் முதலில் தெரிவிக்க வேண்டும் என்று தான் இதை எழுத ஆரம்பித்தேன். ஆனால், இவ்வளவு எழுதிய பிறகு, வந்தனம் எதற்காகச் செலுத்த வேண்டும் என்று ஐயம் உண்டாகிறது. அவர்களுடைய வேலையை, அவர்கள் எல்லோருடைய சார்பாகவும் நான் நடத்தி வருகிறேனே தவிர வேறில்லை.

(கல்கி இதழ் 10-6-45)

# நிலை ஆவர்த்தனம்

(வெங்கட் எழுதிய தனி ஆவர்த்தனம் நாடகத்திலிருந்து)

''அந்தக் காலத்தில் இந்தப் பயலுக்கு மருந்துக்குக்கூட படிப்பு வராது: இப்போ என்னடான்னு மருத்துவம் படிச்சுட்டு டாக்டராக வந்து நிற்கிறான்.''

''கவலைப்படாதீங்க சம்பூர்த்தி. உங்கள் மகள் கண் கலங்காமல் என் மகன் பார்த்துக்கறான்.''

''ஏன், அவனுக்குப் பதிலாக அவன் வெங்காயம் உரிக்கிறானா?''

''என் வைஃப் ஏழைக் குடும்பத்திலிருந்து வந்தவ.''

''என் வைஃப் ஏழைக் குடும்பத்தோடேயே வந்தவள்!''

''எம்ப்பா, வேஷ்டி இவ்வளவு அழுக்கா இருக்கே, திருப்பிக் கட்டிக்கக் கூடாது?''

''ஒரு வேட்டிக்கு எதும்மா மூணு பக்கம்?''

''என் பையன் லெட்டர் போட்டிருக்கான். அவன் காப்பி குடிக்கறதை நிறுத்திட்டானாம்.''

''அட, அதுக்குப் போய் ஏன் வருத்தப்படறே?''

''பாவி, அவன் பாண்டிச்சேரியிலிருந்து லெட்டர் எழுதியிருக்கான்யா.''

- ராமு

□□□□□□□□□□□□□□□□□□□□□□□□

பாரதி மண்டபத்துக்கு அடிக்கல் நாட்டிய விழாவை அடுத்து எழுதியது இது. அந்த விழாவைவிடப் பலமடங்கு பெரிதாக மண்டபத் திறப்பு விழா நடைபெற்றது. அதற்கென எவ்வளவோ பெரிய எடுப்பாக ஆயத்தங்களும் ஏற்பாடுகளும் நடந்திருந்தபோதிலும், விழாவில் கலந்து கொண்ட மிகப் பெருந் திரளான மக்களுக்கு அவை போதியனவாய் இல்லை.

பாரதி மண்டபத் திறப்பு விழாவின் சிறப்புக்களை வர்ணித்து எல்லாப் பத்திரிகைகளிலும் பெரிதாகச் செய்திகள் வெளிவந்தன என்பதை முன்பே பார்த்தோம். சில பத்திரிகைகளில், விழாவின் குற்றம் குறைகளைச் சுட்டிக் காட்டிய கடிதங்கள், கட்டுரைகள் சிலவும் வெளியாயின. அவற்றில் ஒன்றைப் பேராசிரியர் அ. சீநிவாச ராகவன் எழுதியிருந்தார். மற்றவைகளுடன், பாரதியாரின் குடும்பத்தார் விழாவில் தக்கபடி கவனிக்கப்படவில்லை என்ற ஒரு குறையையும் அவர் குறிப்பிட்டிருந்தார்.

அந்த ஆவலாதிக் கடிதத்துக்கு ''வெள்ளி மணி'' 31–10–47 இதழில் அநாமதேயமாய் ஒரு மறுப்பு வெளியாயிற்று. ''அட ராகவா!'' என்பது அதன் தலைப்பு. கோபமும் கேலியும் கலந்ததான அந்த மறுப்பை, சின்ன அண்ணாமலை, அல்லது சாவியோ எழுதியிருக்க வேண்டும் என்று பலரும் நினைத்தார்கள். ஆனால், கல்கியேதான் அதை எழுதியவர். பாரதி மண்டபத் திருப்பணியில் எவ்வித உதவியும் செய்யாத ஒருவர், விழாவைப் பற்றிக் குற்றம் சொல்ல வந்து விட்டாரே என்ற ஆத்திரத்தால் அதை அவர் எழுதினார். ஆயினும் சில குறைகள் நேர்ந்துவிட்டதை அவர் உணராமல் இல்லை; அதற்காக வருத்தப்படாமலும் இல்லை. அதற்குச் சான்று சகுந்தலா பாரதிக்கு அவர் எழுதிய இந்தக் கடிதம்:

*(29–10–47) பாரதி மண்டப விழாவின் போது, ஜனக் கூட்ட மிகுதியினால், எதிர்பார்த்தபடி சில காரியங்களைச் செய்ய முடியவில்லை. ஒருவித துர்ச்சம்பவமும் இல்லாமல் விழாவை முடித்துவிட வேண்டும் என்று ராஜாஜி ரொம்பவும் அவசரப்பட்டார்கள். அவர்களுடைய கோபத்துக்கு நான் ஆளாக நேர்ந்தது. இதனால், நான் எண்ணியிருந்தபடி தங்களையெல்லாம் சரியாகக் கவனித்து மரியாதை செய்ய முடியாமல் போயிற்று. இந்தக் குறையை நிவர்த்தி செய்ய மற்றொரு சந்தர்ப்பம் கூடிய விரைவில் ஏற்படும் என்று நம்புகிறேன்.*

இந்தக் கடிதத்தை உதவிய சகுந்தலா பாரதி இதில் வாக்களித்தபடியே பின்

ஒன்று விழாவில் கல்கி கவிஞரின் குடும்பத்தார் அனைவரையும் மகிழ் வித்தார் என்று பெருமையுடன் தெரி வித்தார்.

''வெள்ளி மணி'' யில் வந்த மறுப் பைக் கண்டு தம்மை அவ்வளவு தூரம் தாக்கி எழுத வேண்டுமா என்பதாக, பேராசிரியர் சீநிவாசராகவனுக்கு முத லில் கோபம் உண்டாயிற்று. பின்னர், அதற்குக் காரணமாக இருந்தது தமது கடிதம்தானே என்பதை உணர்ந்து, அதற்காக வருத்தப்பட்டார்.

கல்கியைப் பற்றிய தமது நினைவுகளை 1955 அக்டோபர் பதினொராம் தேதி யன்று திருச்சி வானொலியிலிருந்து பேரா சிரியர் ஒலிபரப்புகையில் அந்தச் சம் பவம் பற்றிக் குறிப்பிட்டு, ''கட்டிய வீட்டுக்குப் பழுது சொன்ன புண்ணிய வான்களில் நானும் ஒருவன்'' என்று ஒப்புக் கொண்டார். அதை மறந்தும் மன்னித்தும் கல்கி எப்படி நடந்து கொண்டார் என்பதையும் அவர் பெருந் தன்மையுடன் எடுத்துச் சொன்னார்:

சில மாதங்களுக்குப் பிறகு, ''சிந்தனை'' என்ற எனது பத்திரிகையில் வெளியான ''எல்லையில்'' என்ற என் நாடகத்தையும், அந்தப் பத்திரிகையின் ஆண்டு மலரைப் புகழ்ந்து தமது பத்திரிகையில் தலையங்கக் குறிப்பொன்று எழுதினார். பிறகு, சில நாட்க ளுக்கெல்லாம், சென்னை கம்பர் கழகக் காரிய தரிசியாக இருக்க வேண்டும் என்று மிகுந்த அன்போடு வற்புறுத்தி எனக்குக் கடிதம் எழு தினார். எட்டயபுரத்திலே நடைபெற்ற மகத் தான முயற்சியின் பெருமையை மறந்து, ஏதோ சிறு பிழைகளைப் பெரிதாக்கிக் குற்றச் சாட்டுப் படித்த எனக்கு அவர் தந்த பரிசு இது. காந்தீயத்தில் அவர் ஊன்றியிருந்தார் என்பதற்கு இதைவிட அத்தாட்சி எதற்கு?...

எவ்வளவு கடுமையான சோதனையிலும் நகைச்சுவையோடு நடந்து கொள்வதில் கல்கி சமர்த்தர். சென்னை கம்பர் விழாவில், ஒரு வருஷம் சில அன்பர்கள் எழுப்பிய பூசலில் ஒலிபெருக்கியை யாரோ ஒடித்துவிட்டார்கள். ஒரே பரபரப்பு. கல்கி பேசினார்: ''கம்ப ரிடம் பகைமை பூண்டு வந்த அன்பர்கள், ஒலிபெருக்கிக் கம்பைக் கம்பர் என்று எண்ணி விட்டார்கள் என்பது தெரிகிறது. இவர் களுக்குக் கம்பர் யார் என்று தெரிவிப்பதற் காகவாவது கம்பர் விழாவை நாம் நடத்த

# நீ ஒரு மகாராணி

கமலா நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவளாயினும், விதியின் கொடுமையினால் உடலை விற்று வாழும் அபலைப் பெண்களினிடையே தள்ளப் படுகிறாள். அந்தச் சகதியிலிருந்து மீண்டு வரப் பெருமுயற்சி செய்கிறாள்.

கமலா ஒரு சிரமமான 'காரக்டர்' சுஜாதா அதை உணர்ந்து நடிக்கிறார். அவர் விரக்தியாகப் பார்த்து, விரக்தியாகச் சிரித்து, விரக்தியாகவே பேசி ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் சமாளிப்பது நல்ல வேலை நமக்கு விரக் தியளிக்கவில்லை. ஓர் இளைஞனுக்கு, சந்தர்ப்பக் கோளாறுகளின் காரண மாக மனைவியாக நடிக்கப் போய், அந்த வீட்டின் மகாராணியாகவே ஆகி விடுகிறாள் கமலா. கமலாவைத் தொடர்ந்து வரும் ஸ்ரீகாந்த் படத்தின் விறுவிறுப்புக் குறையாமல் பார்த்துக் கொள்கிறார்.

ஆர். கே. தர்மராஜின் மூலக் கதைக்கு, சொர்ணம் திரைக்கதை, வசனம் அமைத்திருக்கிறார். வசனம் இப்படத்துக்குத் தனிச் சிறப்பை ஏற் படுத்தி யிருக்கிறது; சுருக்கமாகவும் சுவையாகவும் இருக்கிறது. டைரக்ஷ னும் சொர்ணமே.

இப்படத்தில், கதாநாயகனுக்கு அடிக்கடி குழம்புவதைத் தவிர உருப் படியான கவலை எதுவும் இல்லை. ஜெய் சங்கர் நன்றாகக் குழம்புகிறார்.

தேங்காய் சீனிவாசன் ஒரு நல்ல மனிதராக வரு கிறார். கத்திப் பேசுவதைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டால் நல்லது.

லேடி டாக்டராக வந்து படபடவென்று பேசி நடிக் கும் மனோரமா திரைப்படத்தின் திருப்பங்களுக்கு உதவியா யிருக்கிறார்.

ஒரு பெண் மனம் வைத்தால் எதையும் சாதிக்க முடியும் என்பதை வலியுறுத்தும் கதைதான் இது. நமக்குத் தெரியாதா என்ன?

—காந்தன்



# We still make Margo Soap in small batches with pure Neem Seed Oil the way we made it in the 1920's

We're not the giant soap manufacturer who produce millions of cakes on a continuous assembly line with ingredients poured in through one end and the finished product out the other. We can't make Margo soap that way.

Margo soap is produced only from pure Neem seed oil (I.S.I. standard) and other oils but without the addition of any synthetic detergent. We believe that synthetic detergents which produce extra-rich lather rob the skin of natural oils making it rough and dry.

The selection and procurement of Neem oil for Margo soap are not easy. We use only standard Neem seed oil for its better medicinal value and germicidal properties and not the easily available neem fruit oil. Naturally it costs more. But we cannot think of Margo soap without Neem oil. The fungicidal and germicidal properties of Neem made the Neem tree known as the "Village doctor"

To retain these properties the processing of Margo Soap become more laborious and complicated. Neem seed oil has to be refined and deodorised first by our special process and then the soap is 'cooked' in small batches for 10 days before being ready. It takes more time and money to make soap our way —That's why it costs more, better quality always does.

We can make soap the other way but we believe in the traditional theory of "Matured cooking" and quality. Result—Margo is still as popular as it was in the twenties Margo the non-medicated soap with all the natural medicinal properties of Neem oil.

Think as to why you use Margo ? Isn't it for it's hygienic value and superior quality which keeps your skin, soft and smooth more than any other variety you can buy ?
*No other soap can claim what we claim.*

**Margo Soap**

the hygienic soap for all seasons, all ages

IDL/MG/7

a product of CALCUTTA CHEMICAL

## விவசாய மங்கை

நாற்று நடு நாற்று நடு நங்கையரே குனிந்து நாற்று நடு
நாற்று நடு நாற்று நடு நல் விளை வாகிட நாற்று நடு
நாற்று நடு நாற்று நடு நாடு செழிக்கவென்று நாற்று நடு
நாற்று நடு நாற்று நடு நாதனைப் போற்றியே நாற்று நடு

வண்ணப்படம்: திலீப் பானர்ஜி



வேண்டாமா?'' என்று அவர் கேட்டதும் எழுந்த சிரிப்பிலும் ஆரவாரத்திலும், கம்பர் விழா கோலாகலக் கோலம் பூண்டது. இந்த ஹாஸ்ய உணர்ச்சியினால் எந்தக் கூட்டத்திலும் வந்தனோபசாரத்தைப் பன்னீர் தெளிப்பது போல் செய்யும் சக்தி கல்கிக்கு இருந்தது. குறைகளை யெல்லாம் மறந்து கூட்டத்தின் இலட்சியத்தை மாத்திரம் மனத்தில் இருத்தி நிறைவோடு வீடு திரும்பும்படி அவர் செய்வார். வேடிக்கையான பேச்சு, இலட்சிய வேகத்தை அழுத்தமாக்கும் தத்துவ நகை, சிறுமையைப் போக்கும் சிவபெருமானுடைய சிரிப்பு — இவை கல்கியின் கருவிகள்.

இன்னும் எத்தனையோ சிரிப்பு வகைகள்.

குற்றமற்ற நகைச்சுவை அல்லது யார் மனத்தையும் புண்படுத்தாத நகைச்சுவை என்பது உண்டுதான். ஆனால், ஒருவரின் தவற்றை அல்லது தகாத செயலைச் சுட்டிக் காட்டுவதற்காகக் கேலி நையாண்டி, சன்னை, அங்கதம் போன்ற நகைச்சுவை வகைகளைக் கையாளுகையில் அவை எப்படிக் குற்ற மற்று இருக்க முடியும்? சம்பந்தப்பட்டவரின் மனத்தை உறுத்துவதும், தவறான போக்கைத் திருத்துவதும்தானே அவற்றின் நோக்கம்?

இந்த நகைச்சுவை வகைகளை, விமரிசனங்களிலும், விவாதங்களிலும் கல்கி நிறையக் கையாண்டார்; இவற்றைத் தவிர, நேராக வன்மையுடன் இடித்துப் புடைக்கும் கூற்று வகைகளையும் கையாண்டார். அந்தச் சந்தர்ப்பங்களில், அவருடைய எழுத்தின் கடுமையைப் பற்றி, அவருக்கு மிகவும் வேண்டியவர்களே குறை கூறுவதுண்டு. அப்படிக் கூறியவர்களில் ஒருவர் தமிழிசை இயக்கம் காரணமாய் அவருடன் நெருங்கிப் பழகிய ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் ஒருவர். அவ்வாறு ராஜா ஸர் குறை கூறியதைக் கல்கியே புலப்படுத்தினார் — அண்ணாமலை மன்றம் திறப்பு விழாவை முன்னிட்டு, 1953 ஏப்ரல் 19ல் வெளியான ''கல்கி'' தமிழிசை மலரில்:

தமிழிசையை எதிர்ப்பவர்களை ஒரு சமயம் நான் காரசாரமாய்த் தாக்கி ஒரு கட்டுரை எழுதியிருந்தேன். இந்தக் கட்டுரை வெளியான சில நாளைக்கெல்லாம் ராஜா ஸர் அவர்களை நான் பார்க்க நேர்ந்தது. வேறு விஷயங்களைப் பற்றிப் பேசினார்களே தவிரக் கட்டுரையைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. ''ஒருவேளை படிக்கவில்லை போலிருக்கிறது'' என்று நினைத்துக் கொண்டேன். கடைசியில் புறப்படும் சமயத்தில் அவர் கூறியதாவது: ''உங்களுடைய கட்டுரையைப் படித்தேன். நன்றாக எழுதியிருக்கிறது. ஆனால் ரொம்பக் கடுமையாகத் தாக்கி யிருக்கிறது. உங்களுக்குப் புத்தி சொல்ல வரவில்லை. என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். இவ்வளவு காரமாக எழுதுவதினால் காரியத்துக்கு அநுகூலம் உண்டா என்று யோசித்துப் பார்க்க வேண்டும்!''

இதைக் கேட்டு நான் ஒரு நிமிஷம் திகைத்துப் போனேன். பிறகு, ''எதிர்ப்பவர்கள் கடுமையாகத்தானே எதிர்க்கிறார்கள்?'' என்றேன்.

''எதிர்ப்பவர்கள் எப்படி வேணுமானாலும் பேசலாம்; எழுதலாம். ஆனால் நாளைக்கு அவர்கள் நம் கட்சிக்கு வருவதற்கு இடம் வைத்து நாம் எழுத வேண்டும். ரொம்பக் காரமாக எழுதிவிட்டால் அவர்கள் நம்முடன் சேருவதற்கே இடமில்லாமல் போய்விடும்'' என்று ராஜா ஸர் கூறியது நேற்றுத்தான் கூறியது போல் இன்னும் என் காதில் ஒலித்த வண்ணம் இருக்கிறது.

ராஜாஜி அவர்கள் அடிக்கடி எனக்கு இதே விதமான புத்திமதி கூறியதுண்டு. ''அதிகமாய்த் தாக்கி எழுதக் கூடாது'' என்று ராஜாஜி அவர்கள் அஹிம்சை நெறியில் நின்று எனக்கு யோசனை சொன்னார்கள். அதே விதமான யோசனையைக் காரிய சாதனையை முன்னிட்டு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களும் கூறினார்கள். வெவ்வேறு நோக்குடன் பார்த்து, இந்த இரு பெரியவர்களும் ஒரே முடிவுக்கு வந்திருப்பதை நினைக்க நினைக்க எனக்கு வியப்பாய் இருந்தது.

தம்மைப் பற்றித் தாமே எழுதுவோரில் இத்தகைய அந்தரங்கச் செய்திகளை வெளிப்படையாகச் சொல்வதற்கு, அபூர்வமாய்ச் சிலருக்கே பண்பும் துணிவும் உண்டு. (தொடரும்)

விட்டால் திறந்த வாயை மூடமாட்டீர்கள்!'' என்றார் நண்பர்.

ஏறக்குறைய எண்பது லட்சம் மக்கள் தொகையை அன்றாடம் காணும் இந்த நகரத்துக்கு 'மகாநகர்' என்றும் பெயர் உண்டு.

'' இந்த ஊருக்குக் 'கல்கத்தா' என்று பெயர் வரக் காரணம்....?'' ஒரு ஹிந்திப் பத்திரிகாசிரியரைக் கேட்டேன்.

'கல்கடா' என்று பெயரைத் திருத்திய அவர் கூறினார்: ''ஆங்கிலேயர்கள் முதன் முதலில் இந்த ஊருக்கு வந்த காலத்தில் வயல்வெளி நிறைந்த வெறும் குக்கிராமமாக இந்த நகரம் இருந்திருக்கிறது. ஒரு குடியானவனைப் பார்த்து இந்த ஊரின் பெயரைக் கேட்டிருக்கிறார்கள் வந்த ஆங்கிலேயர்கள். மொழிப் பிரச்னை குறுக்கிட்டு அவன் விழிக்கவே, இடத்தைத் தொட்டுக் காட்டி ஊமை மொழியில் கேட்டிருக்கிறார்கள். அவர்கள் தொட்டுக் காட்டிய இடம் ஒரு வயல்; முதல் நாள்தான் அறுவடையாகி யிருந்திருக்கிறது. ஊமைக்கு உளறுவாயன் சண்டப் பிரசண்டன் கதையாக நேற்று அறுவடையாகியது என்ற பொருளில் அவன் 'கல் கடா' என்று கூறியிருக்கிறான். அதுவே, பெருநகரமான பின்வரும் நிலைத்து விட்டது.''

''கல்கத்தா காளி புகழ் வாய்ந்தவளாயிற்றே! அவள் பெயர்தான் இப்படி மருவி வந்திருக்கிறதாக்கும் என்றல்லவா எண்ணினேன்!'' என்று ஐய வினா எழுப்பினேன்.

''காளி கோயில் எல்லாம் பின்னால் வந்தது; நீங்கள் நினைக்கிற அளவுக்கு இது பழமையானதல்ல. சொல்லப் போனால் மதன் மோகன் மந்திர்தான் பழமையானது. இங்கே பக்கத்திலே விஷ்ணுபூர் என்று ஓர் ஊர் இருக்கிறது. தாரகோடா சிற்பக் கலைக்குப் பெயர் போன இடம். அங்கு கோயில் கொண்டிருந்த மதன்மோகனை முகலாயர்

◀ வங்காளித் திருமணம்

# பழமை காக்கும் புதுமை!



ஹௌரா தொங்கும் பாலம்

## ஹௌரா!

புலபுலவென்று பொழுது புலரும் நேரத்தில் ஹௌரா பாலம் தெரிந்தது.

ஹுக்ளி என்னும் பெயரில் ஓடும் கங்கை நதியின் மேலே, கல்கத்தாவையும் ஹௌராவையும் இணைப்பதற்காகப் போடப்பட்ட அந்தத் தொங்கு பாலம் அதிசயம் மிகு அபார சாதனை! கப்பல்கள் தங்குதடையின்றிப் போய் வருவதற்கு ஏற்ற வகையில், இக்கரையையும் அக்கரையையும் இணைத்துக் கொண்டு தொங்கிய அந்தப் பிரும்மாண்டமான பாலத்தில், டிராம், பஸ் போன்ற வாகன வசதிகள் அனைத்தும் போய்க் கொண்டிருந்தன! இடையிடையே மராமத்து வேலையும் நடந்து கொண்டிருந்தது.

'' அப்பா! என்ன கூட்டம்!'' என வாய் என்னையும் மீறி வியப்பை எழுப்பியது.

''இந்த ஹௌரா கூட்டத்தைக் கண்டே இப்படி வியக்கிறீர்களே! 'ஸியால்தஹ்' ஸ்டேஷனை ஒன்பது மணி சுமாருக்குப் பார்த்து

களுக்குப் பயந்து பெயர்த்து எடுத்து வந்து இங்குள்ள ஜமீன்தாரிடம் பாதுகாப்புக்காக ஒப்படைத்திருக்கிறார்கள்.

''அந்த மதன்மோகனை ஜமீந்தாரும் அவரது வேலையாளான மதன் மோகனும் போட்டி போட்டுக் கொண்டு பக்தி செலுத்தி வழிபட்டிருக்கின்றனர். வேலைக்காரன் வெளியே போயிருந்த வேளையில் ஒரு நாள் ஜமீந்தாருக்குப் புகையிலை தேவைப்பட்டிருந்திருக்கிறது. அவனைக் கூப்பிட்டிருக்கிறார். தம் பக்தனைக் காப்பதற்காகப் பகவானே பக்தன் மதன் மோகன் வேஷத்தில் புகையிலை கொண்டு வந்து தந்திருக்கிறார். வெளியே போயிருந்த வேலைக்காரன் திரும்பி வந்த பிறகு விஷயம் அம்பலமாகியிருக்கிறது. பகவான் மதன் மோகனின் கை புகையிலை மணம் பரப்பித் தன்னைக் காட்டிக் கொடுத்திருக்கிறது !'' இப்படிக் கூறிய ஆசிரியரின் வாயிலும் புகையிலை மணத்தது.

அவரிடம் விடைபெற்றுக் கொண்டு வந்தவன் தெருவில் போய்க் கொண்டிருந்த பெண்களைப் பார்த்தேன். தழையத் தழைய வாரி


விக்டோரியா மெமோரியல்


பாரஸ்நாதர் கோயில்

ரா. வீழிநாதன்

விட்ட கருங் கூந்தலை முடி போடாமலே அவிழ்த்துவிட்ட வண்ணம் அவர்கள் காளி போலப் போய்க் கொண்டிருந்தார்கள்.

காளீ கடா—அதாவது கரிய முகில் போன்ற கூந்தலை உடைய இந்தப் பெண்மணிகளின் காரணமாக இவ்வூருக்குக் 'காளீ கடா' என்று பெயர் வந்திருக்கலாம், அதுவே நாளடைவில் மருவிக் கல்கத்தாவாகியிருக்கலாம் என்று முடி போடாத அந்தப் பெண்களை வைத்தே என் மனம் ஊரின் பெயருக்கு ஒரு முடி போட்டுப் பார்த்தது.

அப்பொழுது ''இங்கே இதுதான் இவர்கள் வழக்கம்!'' என்று என் ஐயத்தைத் தீர்த்து வைத்த நண்பர், ''இவர்கள் வகிட்டில் குங்குமம் இட்டுக் கொண்டிருந்தால் மணமானவர்கள் என்று பொருள். இரவு நேரங்களில் தான் இங்கே கல்யாணம். சீர்செனத்தியில் இங்கு மீனும் ஒரு பொருள்!'' என்றெல்லாம் கல்யாண வர்ணனை செய்தார்.

தேசியப் பேராசிரியர் என்னும் பெரு விருதைப் பெற்ற பன்மொழிப் புலவர் ஸ்ரீ சுநீதி குமார் சட்டர்ஜியைக் காணச் சென்ற பொழுது அவர் தம்மை 'நன்னெறி முருகன்' என்ற பெயரில் தமிழ் நாட்டவராகவே அறிமுகம் செய்து கொள்வதில் பெருமை கண்டார். தமிழ் இலக்கியத்தின் பாலும், மாணிக்கவாசகப் பெருந்தகையின் பாலும் அவருக்குத்தான் எத்தனை ஈடுபாடு ! தமிழ் இலக்கியத்தை எத்தனை ஆழப் பயின்றிருக்கிறார் ! அவர் கல்கத்தாவுக்கு அந்தப் பெயர் வந்த விதத்தைச் சொன்னபோது, அது வேறு கதையாக அமைந்துவிட்டது. ''கலி என்பது களி; கத்தா என்பது சுண்ணாம்பு. இவ்விரண்டும் அபரிமிதமாகக் கிடைத்த இடம் ஆதலால் இந்தப் பெயர் வந்திருக்க வேண்டும். இன்றும் சூனு கலீ சுண்ணாம்புத் தெரு, சூனு புகுர் (சுண்ணாம்புக் குளம்) என்பது போன்ற பெயர்கள் இந்தப் பக்கத்தில் வழங்குகின்றன. ரஸ்புர், கோவிந்தபுர் போன்ற குக்கிராமங்களைக் கொண்ட பகுதியே பரந்து விரிந்து பெரு நகரமாகிக் 'கல்கத்தா' என்ற பெயரைச் சூட்டிக் கொண்டிருக்க "வேண்டும் என்று தோன்றுகிறது '' என்றார் அவர்.

வங்கத்துக்கும் தமிழ் நாட்டுக்கும் உள்ள வரலாற்றுத் தொடர்பைக் கூறும் நன்னெறி முருகன், பழநி ஆண்டவனையும் கண்டி—கதிர் காமக் கந்தவேளையும் வேண்டித் தவமியற்றிப் பெற்ற தம் பேரக் குழந்தைக்குக் 'குமார முருகன்' என்று பெயர் சூட்டியிருக்கிறார். அந்தச் சுட்டிப் பயலை அறிமுகம் செய்து கொண்டபொழுது அவர் சூட்டிய பெயரின் பொருத்தத்தை நினைந்து மகிழ்ந்தேன்.

அந்தக் காலத்தில் ஆங்கிலேயர்களின் வியாபார கேந்திரமாகி, ஆட்சிக் கோட்டையாக மாறி, இன்று மாநகரமாகத் திகழும்



கல்கத்தா தொங்கும் பயணிகள்.

கல்கத்தா மாபெரும் தொழில் நகரமே ஆகும். சணலுக்குப் பெயர் போன வங்காளத்தின் பெரிய சணல் ஆலைகள் இங்கு இருக்கின்றன. இந்த நகரம் எத்தனை எத்தனை தொழில்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது. அவற்றில் பணிபுரிபவர்கள் எத்தனை பேர் என்பதைக் கணிக்க வேண்டும் என்றால், காலை ஒன்பது மணி சுமாருக்கு ஸியால்தா ஸ்டேஷனுக்குப் போக வேண்டும். சாரி சாரியாக இம்மியும் இடம் விடாமல் மக்கள் ஊர்ந்து வரும் காட்சியைக் காண வேண்டும். 'நரியோடும் காடு' என்ற பொருளைக் கொண்ட ஸியால்தஹ் நரர் மிதக்கும் நகரமாகத் திகழ்கிறது; ஸ்டேஷனை விநாடிக்கு விநாடி மக்கள் கூட்டத்தைக் கொண்டு வந்து குவித்துத் தள்ளுகிறது.

வரலாற்று வல்லுநர்கள் என்னதான் ஊரும் பேரும் ஆராய்ச்சி நிகழ்த்திப் பல்வேறு முடிவுக்கு வந்தாலும், 'காளிகாட்'டில் உள்ள காளி கோயிலின் புகழைக் குறைக்க முடியவில்லை. அவள் பெயராலேயே தான் இந்த ஊருக்கு இத்தனை புகழ் என்று கூறலாம். சக்தி வழிபாட்டின் பிரதான கேந்திரமாகத் திகழும் இந்த நகரத்தில் நவராத்திரி துர்க்கா பூஜையாகக் கொண்டாடப்படுகிறது. வீட்டுக்கு வீடு வாசற்படி என்பது போலத் தெருவுக்குத் தெரு துர்க்கா பூஜை ஏக அமர்க்களப்படும். இந்த விழா ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் சின்னமாகும். இக்கலை வல்லுநர்கள் அழகில் சிறந்த பதுமைகளாகச் செய்து குவிப்பார்கள்; மக்கள் அவற்றைப் போற்றிப் பாதுகாத்து வழிபாடு நடத்துவார்கள். கடைசியில் அவற்றை விசர்ஜனம் செய்யும் முகமாக அழித்தல் தொழிலையும் மேற்கொள்ளுவார்கள். கிருஷ்ணகர் பொம்மைகள் பிரசித்தமானவை. அருகில் உள்ள குமார் துலியும் தன் பங்கு சோடை இல்லை என்று கூறுகிறது.

மணிவாசகப் பெருமான் பரம்பொருளைப் பற்றிப் பாடுமிடத்து, அது பழைமைக்கெல்லாம் பழைமையாகவும் புதுமைக்கெல்லாம் புதுமையாகவும் திகழ்கிறது என்று கூறியிருக்கிறார் அல்லவா? அந்த அருவப் பொருளுக்கு உருவம் கொடுத்தாற் போன்று இயங்குகிற நகரம் இந்தக் கல்கத்தா நகரம். இது பழைமையை விட்டுக் கொடுக்கச் சிறிதும் விரும்புவதில்லை; அதே நேரத்தில் புதுமையை ஏற்கவும் தயங்குவதில்லை. எனவே, பழைமை காக்கும் புதுமை நகரமாகத் துலங்குகிறது. ஒருபுறம் புதுமை மிகு மாட மாளிகைகள், மறுபுறம் பழைமைமிகு குடில்கள்! ஒருபுறம் அகன்ற நீண்ட வீதிகள்; இன்னொருபுறம் குறுகிய சந்துபொந்துகள்! இப்படி இரு துருவமும் இணைந்தாற்போல் திகழ்வதற்கேற்ப, பசி வந்திடும் வேளையிலே பாமரர்—பணக்காரர் என்ற பாகுபாடின்றிச் சந்து பொந்துகளில் உள்ள, உள்ளே உட்காரவே இடம் இல்லாத உணவு விடுதிகளில் ஈயாக மொய்த்துத் தெருவில் நின்ற வண்ணமே சாப்பிட்டுவிட்டுப் போகும் காட்சியைச் சர்வ சகஜமாகக் காணலாம்.

இந்த மாநகரம் எத்தனையோ வாகன வசதிகள் பெருகிவிட்ட இந்த நாட்களிலும் பழைய டிராம் வண்டியை விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறது. ஏழை எளியவர்களின் இந்த வாகன வசதியை எடுக்கக் கூடாது என்ற உறுதிப்பாடே இதற்குக் காரணம். டிராம் வண்டிகளில் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு என்று இரண்டு வகுப்புகள் உண்டு. பத்துப் பைசாவிலிருந்து இருபத்தைந்து பைசாவுக்கு மேல் ஏழையானாலும் பணக்காரனானாலும் கட்டணம் தர வேண்டியதில்லை. குறைந்த செலவிலும் நிறைந்த தூரம் போகலாம். அதற்கடுத்தபடி பஸ்; அதற்கும் மேலாக டிலக்ஸ் பஸ், மினி பஸ் என்று வாகன வசதிகள் உள்ளன. டிராம்களிலும் பஸ்களிலும் நெரிசல் சொல்லி முடியாது. இவற்றில் புளி போல் அடையலாம்; அட்டை போல் ஒட்டிக் கொள்ளலாம். ஓட்டை, உடைசல், தகர டப்பாவாக ஆகிவிட்ட டிராம்களும் பஸ்களும்கூட அதிகமாக மக்கர் செய்யாமல் மக்களுக்குப் பயந்து ஓடுகின்றன! பல்லாண்டுகளாக இருந்த கட்டணத்தை விலைவாசி ஏற்றம் காரணமாகச் சிறிது ஏறுமுகமாக மாற்றி அமைக்கப் பொது மக்களின் சம்மதத்தைப் பெறப் பகீரதப் பிரயத்தனம் என்ன, பிரம்மப் பிரயத்தனமே செய்ய வேண்டி வந்ததாம். டிலக்ஸ் பஸ்ஸில் நிற்பவர்களுக்கு இடம் கிடையாது; உட்காருகிறவர்களுக்கு மட்டுமே இடம். கட்டணமும் அதிகம். படித்த இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்க வேண்டும் என்ற நோக்கத்

தென்னிந்திய பாணியில் வைகுண்டநாதர் ஆலயம்.



# உங்கள் நெற்பயிர்ப் பகைகள் பல உண்டு-ஆனால் ஒரே நண்பன்...

## சைதியான்* 50% ஈஸி மற்றும் 5% டஸ்ட்

### இருவடிவிலும் சைதியான்* பாதுகாப்பானது சக்தி வாய்ந்தது, சிக்கனமானது.

நெல் உங்கள் முக்கிய உணவு—நெற் கருவண்டு.
இலை சுருட்டும் புழு. காற்றுப் பூச்சி. இலைத் தத்துப்
பூச்சி போன்ற பூச்சிகளுக்கல்ல.
அவ்வாறிருக்க. உங்கள் விளைச்சலின் பயனை அவை
அனுபவிக்க விடுவானேன்? சைதியான்* வாங்குவீர்,
தொல்லை தரும் பூச்சி புழுக்களைப் பூண்டோடு
அழிக்க அதனை உபயோகியுங்கள். ...அமோக நெல
விளைச்சலால அபரிமித இலாபம் பெறுவீர்.
ஆம், சைதியான்* உங்கள் சிறந்த நண்பன்.

CYANAMID

சயனமைடு இந்தியா லிமிடெட்.
[illegible] 9109, [illegible] 400 025




சைதியான்* —
அமோக நெல்
விளைச்சல்: அபரிமித
இலாபம்.

* Registered trademark of American Cyanamid Company, Wayne, New Jersey, U.S.A.

தில் மினி பஸ்கள் விட்டிருக்கிறார்கள். இந்த மினி பஸ்களின் சொந்தக்காரர்களான அவர்களுடைய இளமைத் துடிப்பு இந்த மினி பஸ்ஸுக்கும் இருக்கிறது. இவற்றில் பயணம் செய்பவர்கள் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு பயணம் செய்ய வேண்டும். அத்தனை வேகத்தோடு மட்டுமின்றி, இடம் கண்ட இடத்தில் நுழைந்து புறப்படுவதில் இவை நம் ஊர் ஆட்டோ ரிக்ஷாக்களுக்கு அண்ணன். கல்கத்தாவில் ஆட்டோ இல்லாத குறையை நிறை செய்கின்றன போலும்! என்றாலும் நெரிசலைத் தவிர்க்கத் தம்மால் இயன்ற பணியை வெற்றிகரமாகவே செய்கின்றன.

பையில் இருக்கும் பொருளுக்கேற்ப டாக்ஸிகளில்கூடப் பயணம் செய்யலாம். குறைந்த கட்டணம் ரூ. 1.80 இரண்டு ரூபாய் கொடுத்தால் இருபது காசு திரும்பிவிடும் அதிசயத்தை இந்த நகரத்தில் பார்க்கலாம். ஆபீஸ் நேரங்களில் ஐந்தாறு பேர் ஒரே இடத்தில் நின்று 'ஷேர் டாக்ஸி' பிடித்துக் கொண்டுகூடப் போகிறார்கள்!

இத்தனை கூட்டத்தைத் திணித்துக் கொண்டு போகும் டிராம்களும் பஸ்களும் சீட்டுக் கொடுத்து முடிப்பதற்காக அதிகமாக நின்று நின்று பொறுமையைச் சோதிப்பதில்லை. ஆனால் போக்குவரத்து நெருக்கடி என்னும் 'டிராபிக் ஜாம்' ஏற்பட்டுவிட்டால் பொறுமையைச் சோதித்துவிடும். சாலையைக் கடக்கப் பொறுமையை இழந்து நிற்கும் பாதசாரிகளுக்கு இவை கொடுக்கும் மரியாதையைக் காணக் கண் கோடி வேண்டும் என்றால் மிகையில்லை. ஆற்றொழுக்கென ஓடிக் கொண்டிருக்கும் இவ்வண்டிகளை ஒரு முறை கையை நீட்டித் தாழ்த்தி நிறுத்திவிடுகிறார்கள் பழக்கப்பட்டவர்கள். சட்டென்று நின்று அவர்களுக்கு வழிவிட்ட பின்பே வண்டிகள் தங்கள் பயணத்தைத் தொடருகின்றன. நம் ஊராயிருந்தால் டிரைவர்களின் வாயில் மட்டும் என்ன, பயணிகளின் வாயில் கூட அல்லவா புகுந்து புறப்பட வேண்டியிருக்கும்! பாதசாரிகளுக்கு வக்காலத்து வாங்கிப் பேசவில்லை; வாகனக்காரர்களின் பண்பைக் காட்டவே குறிப்பிடுகிறேன். பிச்சைக்காரர்கள்கூட 'ஸலாம்' வைத்து 'மாஃப் கரோ' என்று கூறிவிட்டால் தொந்தரவு தராமல் அகன்றுவிடுகிறார்கள்!

பல்வேறு மொழிகள் பேசும் மக்கள் கல்கத்தா நகரத்தைச் சூழ்ந்திருக்கிறார்கள் என்றாலும், அதிகமாகத் தனித் தொகுதி வாழ்க்கைதான் நடத்துகிறார்கள். ஹௌரா ராமகிருஷ்ணபுர் பகுதியில் குடியேறிய தமிழர்கள் இப்பொழுது லேக் மார்க்கெட் ஏரியா, ராஷ்பிஹாரி அவென்யூ போன்ற இடங்களுக்கும் பரவி விரவியிருக்கிறார்கள். காலையில் மார்க்கெட்டுக்குப் போனால், பழகு தமிழில் அழகாகப் பேசும் வங்காளிக் கடைக்காரர்களைக் காணலாம்! தமிழர்கள் குடியேறியதால் இப்படி ஒரு வங்கத் தமிழர் வகுப்பே உருவாகியிருக்கிறது!

தமிழர்களும் தங்கள் தாய்மொழியைப் போற்ற, தாய்மொழியின் பெருமையைப் பிறருக்கு எடுத்துக் கூறச் சங்கங்கள் நிறுவிச் செயற்பட்டு வருகிறார்கள். பாரதி தமிழ்ச் சங்கம், தமிழ் மன்றம், தமிழ் எழுத்தாளர் சங்கம் போன்றவை தம் நற்பணியினால் பெருமை பெற்றுத் திகழ்கின்றன. நாடகக் குழுக்கள் கூட இயங்கி வருகின்றன. வங்க மேடை வளம் பெற்றிருக்கும் காட்சியையும், அதே நேரத்தில் தமிழ் நாடகம் நடக்கும் முறையையும் காணும் வாய்ப்பு கிடைத்தது. இந்த நாடகக் குழுக்கள் வங்க நாடக மேடை வளர்ச்சியைப் பயன்படுத்திக் கொண்டு, நடிப்பாற்றலைக் காட்ட முடியுமானால், நாயகத்துக்கும் வந்து பெருமையைத் தட்டிக் கொண்டு போகலாம். ஆனால் அந்த அளவுக்கு உயரும் சிரமத்தை அவர்கள் எடுத்துக் கொள்ளவில்லை என்பதை வருத்தத்துடன் கூறத்தான் வேண்டியிருக்கிறது!

தென்னகத்தில் தோன்றி ஆத்மிகத் துறைக்கு வழிகாட்டிய ஆதி சங்கரரின் வழித் தோன்றலாகக் கல்கத்தாவில் இரு சங்கங்கள் செயலாற்றி வருகின்றன. சிருங்ககிரி சாரதா பீடத்தின் அநுக்கிரகத்தோடு நடந்துவரும் 'சங்கரா ஹால்' என்னும் சங்கர நிலையமும், காஞ்சி காமகோடி பீடத்தின் ஆதரவில் நடைபெறும் வேத பவனமும் தமக்கே உரிய பாணியில் அரும் பெரும் பணிகள் புரிந்து வருகின்றன. அவ்வப்போது சத்கதா காலக்ஷேபங்களும் பிரவசனங்களும் நடத்திப் பக்தி மார்க்கத்துக்கு வழிகோலுகின்றன. ஸ்ரீ சங்கரா ஹாலில் இயங்கி வரும் மாதர் கிளையின் வழிபாட்டுப் பணியும் குறிப்பிடத்தக்கது.

காடு நாடாகி, நாடு நகரமாகிய கல்கத்தா நகரிலே சௌரிங்கி மைதானம் ஒரு காலத்தில் உண்மையாகவே காடாக இருந்திருக்கிறது. இன்று பசும் புல் தரை போர்த்த விளையாட்டு மைதானமாகத் திகழ்கிறது. இதை ஒரு சுற்றுச் சுற்றி வந்தால் பொழுதுக்குப் பொழுது போகும்; புத்துணர்வுக்குப் புத்துணர்வு ஏற்படும். ஷஹீத்மினார் என்னும் தியாகிகள் ஸ்தூபம், ரேஸ் கோர்ஸ், செயின்ட் பாலின் கதீட்ரல், பிர்லா பிளானெடோரியம், விக்டோரியா மெமோரியல், ஈடன் கார்டன் ஆகியவற்றையும் காணலாம்.

தென்கிழக்கு ஆசியாவிலேயே தன்னிகரற்று விளங்கும் பிர்லா பிளானெடோரியம் என்னும்

விவாத மேடை

## அற்புதங்கள் பற்றிய அபிப்பிராயங்கள்

ஸ்ரீ சத்திய சாயி பாபா, ஸ்ரீ காயத்ரி சுவாமிகள் போன்ற பலர் அற்புதங்களை நிகழ்த்துகின்றனர். மணலிலிருந்தும் பழங்களிலிருந்தும் வலம்புரிச் சங்குகளும் இதர விக்ரகங்களும் வருகின்றன. நெருப்புக் குண்டத்தில் அமர்ந்தே தவமியற்றி வருகிறார் ஸ்ரீ கணபதி சச்சிதானந்தர். ஆவிகளுடன் பேசுகிறார் ஸ்ரீ மதுரை ஆதீனம்.

இது போன்ற அற்புதங்கள் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன? சுருக்கமாக எழுதவும். பிரசுரமாகும் கடிதங்களுக்குப் பரிசு உண்டு.



இது புது மாதிரி கார் இல்லை!
நியூ மாடல் மோட்டார் சைக்கிள்!
மழை வெய்யிலிலிருந்து ஓட்டுனரைக் காக்கிறது. திருப்பங்களில் சறுக்கி விடாது. டியூப் தேவைப்படாத டயர்களைக் கொண்டது.
வெகு வேகமாகப் 'பறக்கும்' 'குவாஸார்' ஒரு பிரிட்டிஷ் தயாரிப்பு.

நட்சத்திரகூடம் வட்ட வடிவமானது. இதனுள் நுழைந்து இதன் வராந்தாவைச் சுற்றி வந்தால் சூரியன், சந்திரன் போன்றவர்களின் ஓவியங்களையும், பதஞ்சலி, வியாசர், பாணினி, ஆர்யபட்டர் போன்ற பழம்பெருஞ்ஞானிகள், ஐன்ஸ்டீன் போன்ற விஞ்ஞான மேதைகள் ஆகியவர்களின் சிற்பங்களையும் காணலாம். உள் கூடத்துள் சென்றுவிட்டாலோ, ஒரு முறை கண்களைச் சுழற்றி ஓட்டிக் கல்கத்தா நகரத்தில் காணக்கூடிய அதிசயக் காட்சிகள் அத்தனையையும் 'மீனியேச்சர்' தோற்றங்களாகக் காணலாம்.

நடுவில் இருக்கும் இயந்திரத்தைப் பார்த்தால் பிள்ளைப் பூச்சியோ கட்டெறும்போ பன்மடங்கு பிரும்மாண்டமான உருவம் தரித்து அமர்ந்திருக்கிறாற் போலத் தோன்றும். அதற்குத்தான் 'எத்தனை கண்ணாடிக் கண்கள்! விளக்கை அணைத்துவிட்டு அதை இயக்கினால் செயற்கை நட்சத்திர மண்டலம் இயற்கைக்கும் ஒரு படி மேலாகக் காட்சி தரும். அதோடு வான வீதியில் நிகழும் அற்புதங்களை அப்படியே தத்ரூபமாகப் படம் பிடித்துக்காட்டும்! விஞ்ஞானம் மெய்ஞானத்தை எட்டிப் பிடிக்க முயல்கிறது என்பதில் ஐயம் இல்லை. நாற்காலியில் ஹாயாக அமர்ந்து பார்த்தாலும் அண்ணாந்து பார்த்ததனால் கழுத்து வலி எடுத்துப் போகும். அந்த அதிசயத்தை நினைத்துப் பார்க்கும் நேரத்தில் வலி மறந்தும் போகும்.

விக்டோரியா மெமோரியில் ஒரு சலவைக் கல் மாளிகை; இரவு — பகல் எந்த நேரமும் அழகைச் சொரியும் மாளிகை. அதற்குள் அந்தக் காலத்து அரசிகளும் கவர்னர்களும், கவர்னர்களது மனைவிமார்களும் அணிந்த ஆடைகள் காட்சிப் பொருளாகத் திகழ்கின்றன. அந்த நாட்களிலேயே சிறுவர்களுக்கான அகராதி அற்புதமாகத் தயாரிக்கப்பட்டிருப்பதையும் ஆயினே அக்பரி போன்ற நூல்கள் பாதுகாக்கப்பட்டிருப்பதையும் கூட இக்கூடத்தில் காணலாம்.

நூல்கள் என்னும் பொழுது பத்து லட்சத்துக்கும் மேலான நூல் கொண்ட நேஷனல் லைப்ரரியையும், அதில் பைபிலாகிரபித் துறை இயங்கும் விதத்தையும் கட்டாயம் காண வேண்டும். கண்டபின் சென்னையில் உள்ள காணமேரா நூல் நிலையமும் இப்படி இயங்கக் கூடாதா என்று பெரு மூச்சு விடத் தோன்றும். வையாபுரி பிள்ளை அளித்த சுவடிகள் இங்கே பாதுகாக்கப்படுகின்றன.

டல்ஹௌசி ஸ்குயர் என்பது பினய்—பாதல் — தினேஷ் பாக் என்று புது நாமகரணம் பெற்றிருந்தாலும் பழைய பெயரிலேயே அதிகம் புழங்குகிறது. இங்குதான் 'ரைட்டர்ஸ் பில்டிங்' என்ற கட்டடம் இருக்கிறது. அதில் அரசு அலுவலகம் இயங்குகிறது. இந்தக் கட்டடங்களுக்கு எதிரில் 'லால்திகி' என்ற பெருங் குளம் இருக்கிறது. இதைச் சுற்றி மாட மாளிகைகளைத் தோற்றும் வியாபார நிறுவனங்களும் பாங்குகளும் இருக்கின்றன. இருட்டறைச் சம்பவப் புகழ் சிராஜுத்துல்லா மாளிகை பிரதான தபால் நிலையமாகத் திகழ்வதும் இங்குதான்.

ரவீந்திர நாதரின் பிதிரார்ஜிதமான மாளிகையில் ரவீந்திர பாரதி சர்வகலாசாலை இயங்கி வருகிறது. இங்கு கவியரசரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் அவர் முன்னோர்களையும் படம் பிடித்துக் காட்டும் அழகிய காட்சி சாலை ஒன்றும் இருக்கிறது.

இங்குள்ள இந்திய மியூசியக் கட்டடத்தைக் காணும் பொழுது, நமது புராதனக் கலைகளையும் கோயில்களையும் இப்படிக் காக்கவில்லையே என்று எண்ணத் தோன்றும்.

நேரு மியூஸியம் சிறுவர் கலைக்கூடம். ராமாயணமும் மகாபாரதமும்கூட எழில் மிகு காட்சிகளாகப் பதுமைகளைக் கொண்டு ஜோடிக்கப்பட்டிருக்கின்றன.

ஜைனர்களின் பாரஸ் நாதர் கோயில் கண்ணாடி ஜோடனையால் உயர்ந்தது. நகோடா மசூதி பெரிய வெங்காயத்தைக் கும்பமாகக் கொண்டது போலக் காட்சி தருவது. செயிண்ட்பால் கதீட்ரல் வண்ண வண்ண மொஸைக் கற்களால் பாலின் வாழ்க்கையைச் சித்திரிப்பது — இப்படியாகப் பல மதங்களுக்கும் இணைப்புக் கேந்திரமாகத் திகழும் கல்கத்தாவிலே தென்னிந்தியச் சிறப்புச் சிறப்போடு அமைக்கப்பட்டுள்ள வைகுண்ட நாதரின் கோயிலை என்றென்றைக்கும் பார்த்துக் கொண்டிருக்கலாம். பூஜை முறைகள் முதற்கொண்டு தென்னாட்டில் வழக்கில் இருப்பவைதாம்.

இதே போல லேக் கார்டனில் முருகன் கோயிலும் ராமர் கோயிலும் பக்கத்தில் பக்கத்தில் அமைந்துள்ளன. பூஜைகளும் மேளதாளத்துடன் நடைபெறுகின்றன. இக்கோயில்கள் எழச் சைவ — வைணவப் பிணக்கும் ஒரு காரணம் என்கிறார்கள். உறவுமுறையில் மாமனும் மருகனுமான இக்கோயிலுறை தெய்வங்கள் உள்ளூற நகைத்து இரு சாராருக்குமே ஆசி வழங்கி வருகிறார்கள்.

வங்க மக்கள் கலைப் பொருள்களைச் சேகரிப்பதில் ஆர்வம் காட்டுகிறார்கள். வீட்டுக்கு வீடு அவரவர் சக்திக்கேற்பக் கலைச் செல்வங்கள் காட்சி தருகின்றன.

வங்க மக்களை நரை, திரை, மூப்பு அவ்வளவாகப் பாதித்ததாகத் தெரியவில்லை. காரணம், அவர்கள் உணவில் சேரும் மீனும் கடுகு எண்ணெயுமாம்.

கல்கத்தா ஒரு கலகலப்பான நகரம்; பின் தூங்கி முன் எழும் நகரம்.

# வாரீர் — புதுமை தவழ்ந்திட

**எலுமிச்சைப்
புத்துணர்வுப்
பரவசத்தோடு**

லிரில் புத்துணர்வு.
பார்த்தறியாப் புதுமை,
பரவசக் கிளுகிளுப்பு.
லிரில்.
அலையெறியும் தளதள
பச்சை. அதன் நயமோ
குளுகுளு எலுமிச்சை.
பொங்கிப் பீறிடும்
நுரைவளம்.

Liril
THE FRESHNESS SOAP




# லிரில்
புத்துணர்வு சோப்




கிளுகிளு
புத்துணர்ச்சி
நாள் முழுதும்
உங்கள்மீது நிலவ
லிரில் —
புத்துணர்வு டால்க்.

## கிளுகிளு புத்துணர்வில் குளித்தெழ

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்புக்கள்.

லின்டாஸ்—LR-20-140 TM

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. ரகக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக்(சரிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

# எட்டாண்டுத் தவம்!




**எஸ்.** எஸ். எல். சி. பரீட்சையில் தேறி விட்டு ஏதாவது வேலை கிடைக்காதா என்று தேடிக் கொண்டிருந்த நேரம். கடிகார விற்பனையாளர் ஒருவர், வேண்டா வெறுப்பாக எனக்கு மாதம் முப்பது ரூபாயில் குமாஸ்தா வேலை கொடுத்தார்.

நாளடைவில் அவருக்கு என் வேலையில் திருப்தி ஏற்பட்டது. சம்பளத்தை நாற்பத்து ஐந்தாக உயர்த்தினார்.

அந்த ஆண்டு இறுதியில் அந்தக் கடிகாரக் கடைக்காரருக்கு அறிமுகமான ஒரு வடநாட்டு வியாபாரி என்னைக் கவனித்துவிட்டு, ''என்னிடம் வேலைக்கு வந்துவிடு. உனக்கு மாதம் எழுபத்து ஐந்து ரூபாய் சம்பளம் போட்டுத் தருகிறேன்'' என்றார். ஒப்புக் கொண்டேன்.

ஒரு மாதம் ஓடிற்று. சம்பளத் தினத்தன்று கடைச் சொந்தக்காரர் என்னிடம் ஐம்பது ரூபாயைச் சம்பளமாக நீட்டினார்.

''எழுபத்தைந்து ரூபாய் கொடுப்பதாகச் சொன்னீர்களே?'' என்று கேட்டேன்.

''நான் அப்படிச் சொல்லவேயில்லை. கூட ஐந்து ரூபாய் கொடுப்பதாகத்தான் சொன்னேன்'' என்று அந்த வியாபாரி ஒரேயடியாகச் சாதித்துவிட்டார்.

நான் அவசரப்பட்டோ ஆத்திரப்பட்டோ வேலையை விட்டுவிடவில்லை. அதற்குப் பதிலாக இந்த ஏமாற்றத்தை வாழ்க்கையில் நமக்கு ஒரு சவால் என்று எடுத்துக் கொண்டேன். இந்தக் கடையில் இருந்து கொண்டே வியாபார நெளிவு சுளிவுகளைக் கற்றுக் கொண்டு நாமும் ஒரு காலத்தில் சொந்த வியாபாரம் நடத்த வேண்டும் என்று தீர்மானித்தேன்.

அனுபவத்துக்காக அந்தக் கடையில் நான் எட்டு வருடங்கள் தவம் இருந்தேன். அப்போதும் எண்பத்தி ஐந்தே ரூபாய்தான் சம்பளம்.

இச்சமயம் வீட்டிலிருந்து கொஞ்சம் பணம் புரட்டினேன். மூவாயிரம் ரூபாய் முன் பணம் கொடுத்து ஒரு கடையைத் தேர்ந்தெடுத்தேன். ஆறாயிரம் ரூபாய் செலவழித்து மேஜை நாற்காலிகள், ஷெல்புகள் மற்றும் தேவையான அலங்காரங்கள் எல்லாம் செய்தேன். இந்த ஏற்பாடுகளை, நான் வேலைக்கு லீவு போட்டுவிட்டுச் செய்யவில்லை. சம்பளம் வாங்கும் வேலையை முடித்துவிட்டு இரவு ஒன்பது மணிக்கு மேல், பன்னிரண்டு மணி வரை, இந்த ஏற்பாடுகளைக் கவனிப்பேன்! மறு நாட் காலை வழக்கம்போல் வேலைக்குப் போய் விடுவேன்.

என்னுடைய இந்த முயற்சி என் முதலாளி செவிகளுக்கு எட்டியது. ''என்னப்பா! சொந்த பிஸினஸ் ஆரம்பிக்கப் போகிறாயாமே? அகலக் கால் வைக்காதே! ஆபத்தில் முடியும்.... இதோ பாரு! நீ தயார் செய்து வைத்திருக்கும் கடையை நானே பதினையாயிரத்துக்கு விற்று, அதை நல்ல வட்டி கிடைக்கும் இடத்தில் முதலீடு செய்து தருகிறேன். உன் சம்பளத்தையும் மாசம் நூற்றைம்பதாக உயர்த்துகிறேன். நீ என்னிடம் வேலை செய்!'' என்றார்.

ஆனால் என்னிடம் சுதந்திர உணர்ச்சி கொழுந்து விட்டெரியத் தொடங்கி விட்டதே!

நான் சும்மா இருந்தேன். முதலாளி சம்பளத்தை அப்போதே இருநூறாக உயர்த்தினார். மௌனம் சாதித்தேன். இருநூற்று ஐம்பதாக உயர்த்தினார்.

''என்னை மன்னித்து விடுங்கள்! நாளைக் காலை நல்ல முகூர்த்த நேரத்தில் என் சொந்தக் கடையைத் தொடங்கி வைக்க உங்களைத் தான் அழைக்கப் போகிறேன். உங்கள் ஆசியும் அன்பும் தேவை'' என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டேன்.



மறு நாள் காலையில், என் வேண்டுகோளுக்கு இணங்க என் மாஜி முதலாளி வந்திருந்து திறப்பு விழாவை நடத்திக் கொடுத்தார்.

இப்போது ஆண்டு ஒன்றுக்கு நான்கு லட்ச ரூபாய் வரை புரளும் இசைத்தட்டு வியாபாரத்தை நான் சொந்தப் பொறுப்பில் நடத்திக் கொண்டு வருகிறேன்.

**மெலடி ஹவுஸ் உரிமையாளர்**
**திரு எஸ். பி. வி. சுப்பிரமணியம்**
*அவர்களிடம் கேட்டு எழுதியவர்:*

— பட்டினத்தார்

# அறுவை சிகிச்சை இன்றியே மூலநோயைக் குணப்படுத்த அபூர்வ மருந்து !




## பிரிபரேஷன் எச் *

அமெரிக்க டாக்டர்களால் பரீட்சிக்கப்பட்டது.

- நிமிடங்களில் நமைச்சலை நிறுத்துகிறது.
- வலியிலிருந்து உடனே நிவாரணமளிக்கிறது.
- மூலநோய் கடுமையாக இல்லாவிட்டால், அறுவை சிகிச்சை இன்றியே மூலத்தைச் சுருக்க உதவுகிறது.
- இதனால் எண்ணெய்ப்பசை கிடைக்கிறது; மலப்போக்கு வலியின்றி எளிதாகிறது.

*இலவசம்!* மூலநோய் பற்றிய விளக்கப் புத்தகமொன்றை இலவசமாகப் பெற (25 பைசா தபால் தலையுடன்) இன்றே எழுதுக. இம் முகவரிக்கு : டிபார்ட்மெண்ட், PH-66, த.பெ.எண். 10133, பம்பாய்-400 001.

* Regd. User of TM : Geoffrey Manners & Co. Ltd.

243 PH-92 Tam

---

# கட்டழகு வதனத்தில் பொட்டழகு பொலிந்திட...

## ஸ்ரீ குங்குமம்

### டிலக்ஸ்



பல்வேறு, கண்கவர் வண்ணங்கள்.

இட்டுக் கொள்ள வசதியான திரவம்.

அனுமதிக்கப்பட்ட மூலப் பொருட்களில் உருவானது.

மொத்தத்தில் அத்தனைச் சிறப்புகளும் அடங்கிய அழகுக குங்குமம் (சாந்து)




தயாரிப்பாளர்கள்:
**ஸ்ரீ காஸ்மெட்டிக்ஸ்**
குர்லா, பம்பாய்-400 070 தந்தி: 'SRICOSMO'

# உழைக்கும் கரங்கள்



எல்லோரும் சிரித்து வாழவேண்டும் என்று நீதிக்குத் தலை வணங்கி, நீதிக்குப் பின் பாசம் என்று முழங்கி, தாய் சொல்லைத் தட்டாமல், நாளை நமதே என்று நல்ல நேரத்தை எதிர் பார்த்து உழைக்கும் கரங்களை நம்பி வாழும் நல்லவன் வாழ்வான் — என்ன இது என்று கேட்கிறீர்களா? இது 'வாத்தியார்' படங்களின் ஒரே திரைக் கதை. இந்தப் படத்துக்கு மட்டும் அல்ல, இது எந்தப் படத்துக்கும் பொருந்தும். கோவை செழியனின் வண்ணத் தயாரிப்பு இப்படம்.

திரைப்படக் கதாநாயகன் ரங்கனை உயர்த்திக் காட்ட ஆரம்பத்திலிருந்தே பெரு முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. அவனது நேர்மை, நாணயம், பொதுநல நோக்கு, சிறுமை கண்டு சீறும் இயல்பு, ஏக பத்தினி விரதம் ஆகியவற்றை யெல்லாம் எடுத்துக் காட்டப் பல காட்சிகள் புகுத்தப்பட்டிருக்கின்றன. அவற்றிலெல்லாம் எம். ஜி. ஆர். தமக்கே உரிய திறமையுடன் சக்கைப் போடு போட்டிருக்கிறார். கோவில் விக்கிரகத்தைத் திருடும் திருடர்களைப் பயமுறுத்தி விரட்டி யடிக்க எம்ஜியார் ஆவேசக் கனல் பறக்க ருத்ர தாண்டவம் ஆடுகிறார். விறுவிறுப்பான அந்த ஆட்டத்தைக் கண்டு வியந்து மூக்கில் விரல் வைக்காதவரே இல்லை.

லதா, ரங்கனைக் காதலித்துக் கைப்பிடிக்கும் வாயாடி முத்தம்மாளாக வந்து படத்துக்குக் களையூட்டுகிறார். இப்படத்தில், அறிமுகமாகும் புது முகம் பவானி. அவர் நடனப் பெண்ணாக வந்து நன்றாகவே நடித்திருக்கிறார். குமாரி பத்மினி ரங்கனின் சின்ன எஜமானியாகிய இளம் விதவையாக வந்து அவனைக் காதலித்து ஏமாற்றம் அடைகிறார். ரங்கன் அவளுக்கு மறுமணம் செய்து வைக்கிறான். (இளம்விதவை இளமை வெறியோடு ரங்கனைப் பலாத்காரம்செய்யும்காட்சி அருவருப்பானது. சென்ஸார் போர்டு தூங்கி விட்டதா?)

தேங்காய் சீனிவாசன், தங்கவேலு, நாகேஷ் இந்த வீர தீர சாகசப் படத்தின் நகைச்சுவைக்கு ஆதாரமாயிருக்கின்றனர்.

பி. எல். ராயின் ஒளிப்பதிவு இப்படத்தின் தனிச் சிறப்பு. பல நிகழ்ச்சிகளைக் கொண்ட இப்படத்தை கே. சங்கர் விறுவிறுப்பாக இயக்கியிருக்கிறார். ''கந்தனுக்கு மாலையிட்டாள் கானகத்து வள்ளி மயில்'' என்னும் பாடல் உருக்கமாக ஒலிக்கிறது.

திரைக் கதை, வசனம் தீட்டியிருப்பவர் நாஞ்சில் மனோகரன்.

புதுமையான கதை, பாத்திரப் படைப்பு, அது இது என்றெல்லாம் எதிர்பார்த்துக் கவலைப்படாமல், கண்ணுக்கினிய காட்சிகள், கருத்தைக் கவரும் இனிய வசனம், செவிக்கினிய பாடல்கள் என்று பொழுதுபோக்கு அம்சங்களாகப் பார்த்து ரசிப்பவர்கள் ''உழைக்கும் கரங்க''ளைக் கண்டு நிச்சயம் ஏமாற்றம் அடைய மாட்டார்கள். —**காந்தன்**



# இந்தியாவில் டாய்லெட் என்றால் அசுத்தம் என்று பொருள். அது சுத்தமாகப் பொருத்தமற்றது.

நம்மில் பலர் மற்ற அறைகளைச் சுத்தமாக வைத்திருப்பதுபோல், டாய்லெட்டை சுத்தமாக வைத்திருப்பதில் அதிக அக்கறை காட்டுவதில்லை. டாய்லெட்டுக்குத்தான் அதிக கவனம் தேவை என்பதை உணர்வதில்லை. நாம் கவனம் செலுத்தாத எதைப் பற்றியும் சிந்தித்துக்கூட பார்ப்பதில்லை. நம் கவனத்தை ஈர்க்கும் சில உண்மைகள் இதோ!

## அசுத்தமான டாய்லெட் அருவருப்பாக காட்சி அளிப்பதோடு துர்நாற்றமும் வீசுகிறது. அது ஆரோக்கியமற்றது, சிறிதும் சுகாதாரமில்லாதது. அதனால் நமக்கு நிச்சயமாக தீங்கு நேரும்.

இது மறுக்க முடியாத உண்மை. மிகைப்படுத்தியோ அல்லது குறைத்துக் கூறுவதாகவோ எண்ண வேண்டாம். ஒருவேளை உங்களுக்குள் ஒரு முக்கியமான கேள்வி எழலாம்:

## நீங்கள் விரும்பும் அளவுக்கு உங்கள் டாய்லெட் துப்புரவாய் இருக்கிறதா?

உங்கள் ஒருவருக்கு இதற்குத் தக்க விடை தெரியத்தான் வேண்டும்.

தினமும் டாய்லெட்டைச் சுத்தம் செய்ய தோட்டி இருந்தாலும், அவர் செவ்வனே சுத்தம் செய்கிறாரா? அல்லது வேலையை விரைவில் முடிப்பதிலேயே கருத்தாய் இருக்கிறாரா?

இவ் வினாவுக்கு திருப்திகரமான விடை கிடைக்கவில்லையெனில், உங்களுக்கு மகிழ்ச்சி தரும் சேதி இதோ: ஸானிஃப்ரெஷை உபயோகியுங்கள்.

## ஸானிஃப்ரெஷ் என்பது என்ன?

ஸானிஃப்ரெஷ் கக்கூஸ் சுத்திகரிப்புப் பொருள். உங்களுடைய அருவருப்பான வேலையை அது செய்கிறது. முதலில் டாய்லெட்டில் ஃப்ளஷ் மூலம் தண்ணீரை விடுங்கள். ஸானிஃப்ரெஷை டாய்லெட்டின் பேஸினில் தாராளமாகத் தூவுங்கள். 3—4 மணி நேரம் கழித்துப் பாருங்கள். இதைவிட, இரவு பூராவும் அப்படியே விட்டுவைப்பது மிகவும் சிறந்தது. அதற்குப் பிறகு ஃப்ளஷ் செய்யவும். ஃப்ளஷ் வேலை செய்யாவிடில் ஒரு வாளி தண்ணீரை ஊற்றவும். அதோ சுத்தம் செய்யும் எல்லாப் பிரச்னைகளும் தொலைந்து போயின.

## ஸானிஃப்ரெஷ் மூன்று வழிகளில் வேலை செய்கிறது.

### 1. ஸானிஃப்ரெஷ் முழுக்க முழுக்க சுத்திகரிக்கிறது

அதில் தீவிரமாக அசுத்தம் போக்கும் பொருள் இருப்பதால், விடாப்பிடியாக நீங்காத கறைகளும் நீங்கிவிடுகின்றன. தூரிகை புக முடியாத இடத்தையும் சுத்தம் செய்துவிடுகிறது.

### 2. நோய்களைப் பரப்பும் ஆபத்தான கிருமிகளை வெளியேற்றுகிறது.

அசுத்தமான டாய்லெட் நோய்க்குக் காரணமான கிருமிகள் வளரும் இடம். சாதாரண பினைல் தரமுடியாத பாதுகாப்பை ஸானிஃப்ரெஷ் உங்களுக்குத் தருகிறது. ஆகவே ஸானிஃப்ரெஷ் உபயோகிப்பதால் உங்கள் டாய்லெட் முற்றிலும் பத்திரமானது என்பதை நிச்சயமாக நம்பலாம்.

### 3. ஸானிஃப்ரெஷ் துர்நாற்றத்தை துரத்துகிறது.

டாய்லெட்டின் துர்நாற்றம் நாசியைத் துளைக்கும். போதுமான காற்றோட்ட வசதியில்லாத டாய்லெட்டில் துர்நாற்றம் வெளியே செல்லாமல் பிரச்னையை அதிகமாக்கிவிடுகிறது. ஸானிஃப்ரெஷில் வாசனைப் பொருள் இருப்பதால் காற்றிற்குப் புத்துணர்ச்சி ஏற்படுத்தி துர்நாற்றத்தை அகற்றுகிறது.

ஸானிஃப்ரெஷை எத்தனை முறை உபயோகிக்க வேண்டும்? டாய்லெட்டை சுத்தமாக வைத்திருப்பது ஆரோக்கியத்திற்கு அவசியமாதலால் தினமும் உபயோகிப்பதே சிறந்த முறை.




**ஸானிஃப்ரெஷ் உங்கள் அருவருப்பான வேலையைச் செய்து டாய்லெட்டை சுத்தமாக வைக்கிறது.**

பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு நவீனமான வசதிகள்
BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.

# காட்டில் ஜனநாயகம்

ஏ.என்.பட்

சிங்க ராஜா இறந்ததும் இளவரசன் சிம்மாசனம் ஏறினான். புதிய அரசனுக்குச் சீர்திருத்த மனப்பான்மை உண்டு. தனக்கு முன்னிருந்தவனின் சர்வாதிகாரப் போக்கும் தன்னைச் சுற்றி அவன் ஒரு பிரபையை வளர்த்துக் கொண்டிருந்ததும் இவனுக்குப் பிடிக்கவில்லை. அரசனைத் தேர்ந்தெடுக்க ஜனநாயக முறை கையாளப்பட வேண்டும் என் விரும்பினான். மக்கள் மத்தியிலிருந்து மன்னன் தேர்ந்தெடுக்கப்படுவான் என்றும் கிரீடம்



யாருடைய தலைக்குப் பொருந்துகிறதோ அவனே அரசன் என்றும் இவன் அறிவித்தான். இவ் விஷயத்தில் தீர்ப்பு வழங்கும் அதிகாரத்தைத் தனக்கே வைத்துக்கொண்டான்.

முயல், குரங்கு, ஓநாய் முதலியன வந்து கிரீடத்தை அணிந்து பார்த்தன. பொருந்த



வில்லை. சிங்கமும் சரியில்லை என்று கூறி விட்டது.

கழுதை அணிந்து பார்த்தது. சரியாகப் பொருந்துவதாக அதற்குத் தோன்றியது. சந்



தோஷத்தால் குதித்தது. முடிசூட்டு விழாவுக்கு எல்லோரையும் அழைக்க ஆரம்பித்து விட்டது.

ஆனால் அது சற்று அவசரப்பட்டு விட்டது. சிங்கம் கோபம் கொண்டு கழுதையைத் தாடையில் ஓங்கி அடித்தது. ''நீ பொய்யன்'' என்றது.

கழுதை அழுதபடியே, ''என் தலைக்குச் சரியாகப் பொருந்துகிறதே. இங்குள்ள எல்லாரும் பார்க்கட்டும். சரியாகத் தானிருக்கிறது'' என்றது.

''என் தீர்ப்பைப் பற்றிச் சந்தேகப்பட உனக்கு என்ன தைரியம்!'' என்றது சிங்கம். ''நான்தான் இங்கு நீதிபதி. நான் கிரீடம் பொருந்தவில்லை என்கிறேன்!'' இப்படிக் கூறிச் சிங்கம் கழுதையைச் சபையிலிருந்து விரட்டி அடித்து விட்டது.

இதன் பிறகு கூடியிருந்த பல மிருகங்கள் வந்து கிரீடத்தை அணிந்து பார்த்தன. பொருந்திற்றோ இல்லையோ சிங்கம் பொருந்தவில்லை என்றே கூறி வந்தது. எந்த மிருகத்துக்கும் சிங்கத்தை மறுத்துப் பேசத் துணிவில்லை.

வேறு யாருமே அணிந்து பார்க்கப் பாக்கி இல்லாத சமயம் சிங்கம் தன் தலையில் தானே கிரீடத்தை வைத்துக் கொண்டது. ''ஆஹா! எத்தனை பொருத்தமாய் இருக்கிறது!'' என்றது. ''எனவே நான்தான் இனி உங்கள் அரசன்'' என்றது.

எல்லா மிருகங்களும் இதை ஏற்றுச் சிங்கத்தை வாழ்த்தி ஆரவாரம் செய்தன.

**நீதி:** (நீங்களே எழுதிக்கொள்ளவும்)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் வழங்கும் தீஞ்சுவையுள்ள 'திடீர்த் தயாரிப்பு.'

## கஸ்டர்டு தயாரிப்பு

ஐஸ்க்ரீம், பலூதா, கீர், ரபடி தயாரிக்கும் போது, மிருதுவான, க்ரீம் போன்ற **பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடரைப் பாலுடன் கலந்து கெட்டியாக்கவும்.

அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு பக்குவப்படுத்தப்பட்டதால், கஸ்டர்டு பவுடர்களிலேயே மிகச் **சிறந்தது பிரவுன் & போல்ஸன்.**




முட்டை கலவாதது.



கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரை. லிட்.
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். சோமானி மார்க், பம்பாய் 400 001.

OBM/5471 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு



ஆஹா!
என்ன பொருத்தம்!!

மனதிற் கேற்ற
மாங்கல்யம்
அழகுக் கேற்ற
சாரதாஸின்
பட்டுப் புடவைகள்

# சாரதா’ஸ்

(பட்டுப்புடவைகளில் புதிய டிசைன்களுக்கு முன்னோடிகள்)

தன் பில்டிங்,
மவுண்ட் ரோடு,
சென்னை-600002.

N. S. B. ரோடு,
திருச்சி-620002,
போன் 7077.